

சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை
நின்று வினை கெடுக்கும் நீர்மையால் - என்றும்
கடிக்கமல நான்முகனும் கண்மூன்றத்தானும்
அடிக்கமல மிட்டேத்துமங்கு.

"(அன்பர்களே!) மிகவும் உயர்ந்த சிகரத்தை உடைய திருமலையை சென்று வழிபடுங்கள். (ஏனெனின்) அத்திருமலையானது தன் இயற்கை யினால் பாவங்களை அழித்திடும் ஆற்றல் உடையது. அத்திருமலையில் மணம் வீசிடும் தாமரையில் பிறந்தவனான பிரம்ம தேவனும், மூக்கண்ணை உடைய சிவபெருமானும் எப்போதும் எம்பெருமானது திருவடிகளிலே மலர் கள் தூவி, அவனையே தொழுது கொண்டிருப்பார்கள்."

--நான்முகன் திருவந்தாதி - 42

ஸப்தகிரி

செப்டம்பர் - 1996

தனிப்பிரதி ரூ. 4 வருடச்சந்தா ரூ. 48/-
மலர் 27 இதழ் 4



பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.

## உள்ளுறை

பக்கம்

மன்னும் மணியும் ... 7
ஸ்ரீ வேங்கடேச பிரபத்தி ... 12
திருமலை ... 22
ப்ரதிவாதி பயங்கரம் அண்ணாவும் திருவேங்கடத்து அண்ணலும் ... 38
பகவத் கீதை ... 40
திருவேங்கடமுடையானும் நம்மாழ்வாரும் ... 43
வைணவ வழக்குச் சொற்களும் பொருள்களும் ... 45

## அட்டைப்பட விளக்கம்

| | |
|---|---|
| முகப்பட்டை | : வைர அங்கியில் 'ஸ்ரீமலையப்ப சுவாமி' திருமலை. |
| முதல் உள்ளட்டை | : ஸ்ரீ கோகுல கிருஷ்ணர் - சித்திரம்: மா.ஸ்ரீ. |
| 2-வது உள்ளட்டை | : ஸ்ரீ வராஹ சுவாமி - திருமலை. |
| பின்னட்டை | : ஸ்ரீ விநாயகர் - சித்திரம்: ஜி. சந்திரசேகர் |

JAGADISH

## உங்களுடன்....

'மகிழ்ச்சி'. இது மனம் அனுபவிக்கும் இனிமையான, இன்பமான உணர் வாகும். இதனை 'கண்டு' பெறலாம். கண்டதை 'நினைத்து' பெறலாம். எது மகிழ்ச்சி? தனக்குப் பிடிக்காதவன் தடுக்கிவிழுந்தாலும் தனக்கு மகிழ்ச்சிதான். அரசியல், வியாபாரம் இதில் தன் எதிரி தோல்வியுறும் போது ஒருவன் பெறு வதும் மகிழ்ச்சிதான். ஆனால் தான் தடுக்கி விழும்போது, தோல்வியைத் தான் தழுவும் போது, அப்போது தான் கண்ட மகிழ்ச்சியை இதுபோது நினைத்து மகிழமுடிகின்றதா! ஆம் அம்மகிழ்ச்சியே வேதனையாகின்றது. ஆகவே எது உண்மையான மகிழ்ச்சி என்று தெரிந்து கொள்ளும் போதுதான் மகிழ்ச்சியே ஏற்படுகின்றது. மனிதன் மகிழ்ச்சியாகவே வாழ விரும்புகின்றான். இதனை அடுத்த வன் மகிழ்ச்சியாக இருந்தாலொழிய, அவன் எதிர்பார்க்கும் மகிழ்ச்சி நிரந்திரமாக அவனுக்குக் கிடைத்திடாது. இந்த மகிழ்ச்சியை பெறுவது எவ்வாறு?

சுயநலமற்று, பொதுநல மனப்பான்மையுடன் ஒருவன் விளங்கினால் மகிழ்ச்சி அவனுள்ளும், அவனில்லத்திலும் நிரம்பி வழியும். இந்த பொதுநல மனப்பான் மையை வளர்ப்பது எது என்ற ஒரு கேள்வியை எழுப்பிக்கொண்டால், அது இந்து சமயம் என்று சொல்லாமலேயே, சந்தேகமின்றி விடையாக அமைந்திடும்.

பலவாறுன தத்துவ விளக்கங்களை தன்னகத்தே கொண்டு விளங்கிடும் இந்து சமயத்தால் மனிதனுக்கு குழப்பமேயின்றி, மனமகிழ்ச்சி ஏற்பட வாய்ப்பில்லை என்பது ஒருசில பகுத்தறிவாளர்களின் சீரிய சிந்தனையின் வெளிப்பாடாகும். இது உண்மையா? மனம் மகிழ்ச்சியாக அமைந்தால்தான் அறிவு ஆக்கப்பூர்வமான சிந்தனையை வளர்த்திடும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. மனம் ஆரோக்யமாக அமைந்தால், 'மகிழ்ச்சி' நிரந்தரமாக இருந்திடும். அறிவு உன்னதமாக செயல்படும். இதனைத்தான் இந்து சமயம் எதிர்பார்க்கின்றது. இந்து சமயம் மனிதனின் உளவியல் பாங்கினை நன்கு தெரிந்துகொண்ட ஓர் இயக்கமாகும். மனிதமனம் பலமுரண்பாடுகளைக் கொண்டது. அறிவு வளர, வளர மனித சிந்தனைக்குள் வேறுபாடுகள் அதிகமாகும். ஆனால் இம்முரண்பாடுகளும் வேறுபாடுகளும் முதலில் மனித மேம்பாட்டிற்கு வழிவகுத்திடல் வேண்டும் என்பது இந்து சமயத்தின் அடிப்படை பேரவா ஆகும். அதனால்தான் மனிதனின் மாறு பட்ட சிந்தனைகளுக்கேற்ப பல தத்துவ விளக்கங்களைக் கொண்ட பல கிளைச் சமயங்களை இந்து சமயம் தன்னகத்தே கொண்டு திகழ்கின்றது. அத்தத்துவ விளக்கங்களின் வெளிப்பாடாகத்தான் பல இதிஹாஸ புராணங்கள், கதைகள், பாடல்கள் போன்றவற்றை நமமுன்னோர் நமக்குத் தந்துள்ளனர். அவை கொண்டாடிடும் கடவுளர்களை மனிதன் தொழுதிடும் வகையில் இந்து சமயம் பல சமயப்பண்புகளை நமக்கு அறிவுறுத்தியுள்ளன. முத்தம் தந்தும், கட்டியணைத்தும், உச்சி மோந்தும், அழகுபடுத்தியும் தங்கள் குழந்தைகளின் மீது பெற்றோர்களும்,

உறவினர்களும் தங்கள் பாசத்தை, அன்பைக் காட்டுவது போல், தாங்கள் வழிபடும் கடவுளர்களுக்குப் பல பண்டிகைகளைக் கொண்டாடி, பல விழாக்களைக் எடுப்பித்து மக்கள் தங்கள் பக்தியைக் காட்டிக்கொண்டனர். பண்டிகைகள் எனும்போது, ஒரு வீட்டில் அவற்றைக் கொண்டாடிடும்போது அங்கு நிலவிடும் 'மகிழ்ச்சி'யின் வட்டம் சிறியதாகவே அமைந்துவிடுகிறது. ஆனால் அதுவே 'விழா' எனும் போது அம்'மகிழ்ச்சி'யின் எல்லை விரிவடைகின்றது. அந்த 'எல்லை'யில் மனிதன் தன் தனிப்பட்ட தொல்லைகளை மறக்கின்றான். தான் தனது என்ற குறுகிய வட்டத்திற்குள் தாக்கப்படும் கவலைகளை மறந்து, குறுகிய மனப்பான்மையை விடுத்து, ஊர் மகிழ்ச்சியில் தன்னை மறக்கின்றான். சிந்தனை சீரியதாகின்றது. இதனை மனதிற்கொண்டுதான் இந்து சமயம் 'கோயில் விழா'க்களை கொண்டாடிட, ஆகம நூல்களின் வழியாக, நமக்கு வழிவகுத்துள்ளது. கோயில்களின் பெருமை, அக்கோயில்கள் பெற்றுள்ள சிறப்பினைப்பொறுத்து அமைந்திடும் போது நாளும் விழாக்கோலம் பூணும் திருமலைக்கோயிலின் பெருமை ஆண்டாண்டு கொண்டாடப்பெறும் பிரம்மோத்ஸவத்தின் மூலம் பேசப்படுகிறது.

இனம், இடம், மொழி கடந்து மக்களை தோளோடு தோள் சேர்த்து வைத்து, சமய ஒற்றுமைக்கு, இந்திய ஒருமைப்பாட்டிற்கு வழிவகுக்கும் இப் பிரம்மோத்ஸவம் புராணங்காலந்தொட்டு, பேரரசுகளின் ஆதரவில் பெரிதும் போற்றப்பெற்று இந்நாள்வரை திருமலையில் கொண்டாடப்பெற்று வருகின்றது. ஆண்டாண்டு புதுப்பொலிவுடன் திகழ்ந்துவரும் இப்பிரம்மோத்ஸவம், இவ்வாண்டு, வருகைபுரியும் யாத்திரிகர்களின் எண்ணிக்கையை கருத்திற்கொண்டு மேலும் பல புதிய ஏற்பாடுகளை தேவஸ்தான மேலாண்மை மேற்கொண்டுள்ளது. இப்பத்து நாட்களின்போது வேத மந்திர ஒலிகளால், புனித வேள்விப் புகையினால், சமயப்பேருரைகளின் கருத்துக்களால், இன்னிசைக் கச்சேரிகளின் இனிமையினால், பஜனைக்குழுவினர்களின் கோவிந்தநாம பெருமை பேசும் கீர்த்தனைகளின் பக்திப்பெருக்கால் திருமலை உண்மையிலேயே 'கலியுக வைகுண்டமாக'த் திகழ்ந்திடும். இவ்வாண்டு விழாவினைக் கண்டோரை அடுத்த ஆண்டும் வரவேண்டும் என்றும், இந்த ,ஆண்டு வராதவர்களை அடுத்த ஆண்டாவது செல்ல வேண்டும் என்றும், இதுவரை வராதவர்களை இனியாவது வரவேண்டும் என்றும் பல எண்ண அலைகளை சிந்தனையில் வளர்த்திடும் இத்திருமலை பிரம்மோத்ஸவம் 'மகிழ்ச்சி' எனும் சொல்லுக்குப்பொருளாக அமைந்திடும் என்றால் அது மிகைப் படுத்தப்பட கூற்று அன்று. இவ்வுண்மையை திருமலைக்கு வருகை புரிந்து பிரம்மோத்ஸவத்தில் கலந்து கொண்டு அறிந்து இன்புறுவீர் என்றே திருமலை திருப்பதி தேவஸ்தானம் உங்களை அன்புடன் விழாவிற்கு வருகை புரியுமாறு கேட்டுக்கொள்கிறது.

# செய்திச் சுருக்கம்

### திருமலையில்....

ஆந்திர மாநில தலைமைச்செயலர் திரு. எம்.எஸ். ராஜாஜி அவர்கள் கால்நடையாக திருப்பதி அலிபிரியிலிருந்து திருமலைக்கு வருகை புரிந்தார். மலையில் தி.தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் உள்ளிட்ட பல அலுவலர்களால் வரவேற்கப்பட்டார்.

* * *

இந்தியப் பிரதமர் திரு. எச்.டி. தேவேகௌடா அவர்கள் 23-8-96 அன்று திருமலைக்கு தம் குடும்பத்தாருடன் வருகை புரிந்தார். திருமலையில் பிரதமர் அவர்கள் ஆந்திரமாநில அறநிலையத்துறை அமைச்சர் திரு. சிம்மாத்திரி சத்யநாராயண, தி.தி. தேவஸ்தான பொறுப்பாண்மைக்குழுத் தலைவர் திரு. ராம்பாபு மற்றும் தேவஸ்தான உயர் அலுவலர்களால் வரவேற்கப்பட்டார். தரிசனத்திற்குப் பிறகு பிரதமர்க்கு கோயில் பிரசாதங்கள் வழங்கப்பட்டு, பொன்னாடைப் போர்த்திக் கௌரவிக்கப்பட்டார்.

* * *

### பாராட்டு

இவ்வாண்டு சிறந்த பண்டிதர்களாக தேர்ந்தெடுக்கப்பட்ட 22 அறிஞர்பெருமக்களில் ஒருவராக திருப்பதியைச் சார்ந்தவரும், தி.தி. தேவஸ்தானததில கீழ்ததிசைக்கல்லூரியில வடமொழி பணடிதராக பணி புரிந்தவரும், தறபோது தேவஸ்தானத்தின் 'பாகவதம்' நூல் வெளியீடுத் துறையின் ஆசிரியருமாக பணிபுரிபவருமான வித்வான் என்.சி.வி. நரசிம்ஹாசாரியார் அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு விரைவில் இந்தியக் குடியரசுத்தலைவரால பாராட்டப்பட உள்ளார் இதனால் இவருக்கு ஒவ்வொரு ஆண்டும் ரூ. 20,000 சன்மானத் தொகை அவர்தம் ஆயுட்காலம் முழுவதும வழங்கபபடும.

* * *

### நூற்றாண்டு விழா

வைகானஸ ஆகமப் பிரிவில் வடமொழி உள்ளிட்ட தெலுங்கில் பல நூல்களை எழுதிட்ட ஆகம வித்வான் திரு. பார்த்தசாரதி பட்டாசாரியாரின் நூறுவது ஆண்டு பிறந்தநாள் விழா 11-8-96 அன்று வெகு விமர்சையாகத் திருமலையில் கொண்டாடப்பட்டது. தி.தி. தேவஸ்தானத்தில் சுமார் 30 ஆண்டு காலமாக வைகாநஸ ஆகம பண்டிதராக பணிபுரிநதிடட அவர்தம் சேவை இதுபோது நினைவு கூரப்பட்டது. அவர் எழுதிய சில புத்தகங்களை தி.தி. தேவஸ்தானம் பல ஆண்டுகளுக்கு முன்பேயே வெளியிட்டது. இவ்விழாவில் திரு. வேதாந்தம், அனந்தபத்மநாபாசார்யா, மாடம்பாக்கம் ஸ்ரீநிவாசாபட்டாசார்யா மற்றும் பல வைகானஸ ஆகம பண்டிதர்கள் கௌரவிக்கபபட்டனர். மற்றும் திரு. ஏ. ராமசாமி, திரு. பு. வைகானஸாசார்யுலு ஆகியோரும் பங்கேற்றனர்.

* * *

### மற்றையச் செய்திகள்

திருப்பதியில் தி.தி. தேவஸ்தானத்தாரால் நடத்தப்பட்டுவரும் ஸ்ரீபாலாஜி உடல் ஊனமுற்றோர் மறுவாழ்வு மற்றும் ஆராய்ச்சி மையம் குளிர்சாதன வசதி பெற்று விளங்கிடும்வகையில் ரூ. 8 இலட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது. மேலும் இம்மையத்திற்கென மின்சார ஜெனரேட்டர்கள் வாங்க ரூ. 33.80 இலட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது.

* * *

திருமலையில் தேவஸ்தான அலுவலர்கள் மற்றும் ஊழியர்கள் தங்கிடும் வகையில் ரூ. 80 இலட்சம் செலவில் 'ஓய்வு இல்லம்' ஒன்று கட்டப்பட உள்ளது.

* * *

திருப்பதியில் ரூயா அரசு மருத்துவமனையில் குழந்தைகள் சிகிச்சைப் பிரிவினை மேம்படுத்திட ரூ. 2 இலட்சம் வழங்கப்பட்டுள்ளது.

* * *

### மலேசியாவிற்கு அழகிய கோயில் கொடிமரம்

மலேசியாவில் கெடாவில் பீடோங்கு என்ற இடத்தில் உள்ளது ஸ்ரீசித்தி விநாயகர் கோயில். இது பிரசித்தமான கோயில்.

இந்த கோயிலுக்கு அழகிய கொடிமரம் ஒன்று உலோகத்தால் செய்யப்பட்டது. தஞ்சை மாவட்டம் சுவாமி மலையில் உள்ள எஸ். தேவசேனாதிபதி ஸ்தபதியாரின் சிற்பக்கூடத்தில் இது கண்ணும் கருத்துமாக செய்யப்பட்டது.

பரம்பரை சிற்பக் கலைஞரும், ஜனாதிபதி விருது பெற்றவரு மான
ஸ்ரீமான் எஸ். தேவசேனா பதி அவர்கள ஸ்ரீகாஞ்சி மடம், ஸ்ரீசங்கராச்சாரிய சுவாமிகளின் அருளாசியுடன இதனை சிறப் பாக செய்து முடித்தார்கள்.

17-7-96 காஞ்சி இளைய சுவா மிகள் ஸ்ரீசங்கர விஜயேந்திர சுவாமிகள் சுவாமிமலை சிற்பக் கூடத்திற்கு எழுந்தருளினார்கள். காஞ்சி இளைய சுவாமிகளை எஸ். தேவசேனாபதி உட்பட ஏராளமானோர் பூர்ண மரியா தையுடன் வரவேற்றூர்கள்.

அங்குள்ள 8 அடி உயர நட ராஜர், 21 அடி உயர செப்புக்க லசம், கொடிமரம் இவைகளை தொட்டு ஆசீர்வதித்தார்கள்.

சிற்பக்கூடத்தில் உள்ள மத் திய அரசினால் வெளியிடப் பட்ட "சென்சஸ் ஆப் இந்தியா" என்ற நூலில் உள்ள சிற்பிகள் 50 தலைமுறைகளைக் காட்டும் பரம்பரை விளக்கப்படத்தை யும் பார்வையிட்டு ஆசீர்வதித் தார்கள்.

கும்பகோணம் மருதாநல்லூர் கிழக்கில் உள்ள பிரசித்திப் பெற்ற கருவளர்சேரி ஸ்ரீசக்ர மேரு சகித அகிலாண்டேஸ் வரி கோயிலுக்கும் சென்று வழி பாடு செய்தார்கள் ஸ்ரீசங்கர சுவாமிகள்!

தகவல்: வீ.பி.கே. மூர்த்தி
பாபநாசம்

* * *

## ஆலய மகாகும்பாபிஷேகம்

தஞ்சை மாவட்டம் பாப நாசம் தாலுகா திருமண்டங் குடியில் எழுந்தருளியிருப்பது ஸ்ரீரெங்கநாதர், ஸ்ரீரெங்கநா யகி கோயில். இக்கோயில் மிகவும் புராதனமான கோயில். தொண்டரடிப்பொடி ஆழ்வார் பிறந்த ஊர் - அவர் இத்திருத்த லத்தின் பெருமாளை பாடித்து தித்து உள்ளார். தொண்டரடிப் பொடி ஆழ்வாருக்கு ஒரு தனி கோயிலும் இங்கு உள்ளது.

இக்கோயில் மிகவும் பழுது அடைந்து இருந்தது. இதனை பல லட்சம் ரூபாய் செல வில் பக்தர்கள் புதுப்பித்து உள்ளனர். விமானங்கள் பழுது பார்த்தல், தளம் பூசு தல், மடைப்பள்ளி, ஆழ்வார் சன்னதி அனைத்தும் புதுப்பிக் கப்பட்டன. இதனை சென் னையைச் சேர்ந்த டாக்டர் உ.வே ஸ்ரீஎஸ். செல்வம், மற் றும் அறங்காவலர்கள், பக்த பிர முகர்கள் இதனை சிறப்பாக செய்து கொடுத்து புண்ணியம் தேடிக்கொண்டு உள்ளனர்.

4 கால யாக பூஜைகள் நடந் தன. 2 பத்ம குண்டம், 8 சதுர குண்டங்களில் 10 சிவாச்சாரி யார்கள் யாக பூஜை நடத்தி னார்கள்.

கும்பாபிஷேகத்தில் ஸ்ரீமான் ஸ்ரீரங்கம் ராமானுஜ ஜீயர் சுவா மிகள், கிருஷ்ண பிரேமி சுவா மிகள் எழுந்தருளியிருந்து பக் தர்களுக்கு ஆசிர்வாதம் வழங் கினார்கள்.

கும்பாபிஷேகத்தில் ஆயிரக் கணக்கான பக்தர்கள் கலந்து கொண்டனர்.

இக்கோயில் புதுப்பிக்கப்பட் டதன் மூலம், திருமண்டங் குடி பெருமாளும், தாயாரும் தஞ்சை மாவட்டத்து மக்க ளும் புதுப்பொலிவும் திறமும் பெரும் பேறும் பெற்றுள்ளனர் எனக் கூறலாம்.

தகவல்: வீ.பி.கே. மூர்த்தி
பாபநாசம்

* * *

## ஸர்வ தரிசனம்

**திருமலைக் கோயிலில் ஸர்வதரிசனம் புதன், வியாழன் மற்றும் வெள்ளிக்கிழமைகளைத் தவிர நாளும் காலை 6 மணி முதல் 11 மணி வரையிலும், மதியம் 12 மணியிலிருந்து இரவு 7 மணி வரையிலும், இரவு 8 மணியிலிருந்து இரவு 10-30 மணி வரையி லும் அல்லது கூட்டத்தைப் பொறுத்து 'ஸர்வதரிசனத்'திற்காக பொதுமக்கள் அனுமதிக்கப்படுவர். சாதாரண நாட்களின் போது ஸர்வதரிசனம் நாள் ஒன்றிற்கு $14\frac{1}{2}$ மணி நேரங்களும், கூட்டம் அதிகமாக இருக்கும் நாட்களின் போது நாள் ஒன்றிற்கு 18 முதல் 20 மணி நேரங்கள் வரை அனுமதிக்கப்படும்.**

## விண்ணப்பம்

**'ஸப்தகிரி' இதழுக்குக் கதை, கட்டுரைகள், துணுக்குகள் அனுப்பு மாறு எழுத்தாளர் பெருமக்களை மேலாண்மை கேட்டுக்கோள்கிறது. பிரசுரிக்கப்படும் கதை, கட்டுரைகளுக்கு மட்டுமே சன்மானத்தொகை வழங்கப்படும்.**

**ஆசிரியர்.**

# மன்னும் மணியும்

டாக்டர். V.V. ராமாநுஜன் - சென்னை.

மன்-மன்னனெனவிரியும். ஸ்வாமி-ஆண்டவன். மணிமலை-அழகியமலை; நிரதிசயபோக்யமும் பரமபுருஷார்த்தமதுமான மலை - மிக்கவின்பம் தருமதும், விரும்பிப்பெறும் பேறுகவுள்ளதுமான மலை. வடவேங்கடமான திருமலையை ஆழ்வார்கள் அதுவே எல்லாம் தரக்கூடிய - பேரின்பமான வீட்டையும் தரக்கூடிய மலையாகவே அநுபவித்துள்ளார்கள். திருவேங்கடமலை எம்பெருமானுடைய லீலைக்காகப் பரம பதத்தினின்றும் "இறக்குமதி" செய்யப்பட்டதாகப் புராண வரலாறு. 'வேங்கடமே யாம் விரும்பும் வெற்பு' என்பர் பூதத்தாழ்வார். (2திருவந்.53) வெற்பு-மலை. இதன் மேல் கோயில் கொண்டுள்ள அப்பனை மலையின் ஒரு சிகரமாகவும் மலைமேலுள்ள ஒரு கற்பக வ்ருக்ஷமாகவுமே ஆழ்வார்கள் திருவுள்ளமெனத் தெரிகிறது. ஆழ்வார்கள் இக்கருத்திற் பாடிய பாசுரங்கள் பலவுண்டு. சிலவற்றை சுவைத்து இன்புறுவோம்.



வழிநின்று நின்னைத்தொழுவார் வழுவா
மொழி நின்ற மூர்த்தியரேயாவர்- பழுதொன்றும்
வாராதவண்ணமே விண்கொடுக்கும், மண்ணளந்த
சீரான் திருவேங்கடம். (1 திரு -76)

'மண்ணளந்த சீரையுடைய திருவேங்கடத்தண்ணலே! தூங்கும் ப்ரஜையைத் தடவி மகிழும் தாய்போலே உலகங்களை அளப்பானாய் மண்ணவரை உனது திருவடியால் தடவிய நீர்மைக் குணமுடையவனே! வழிநின்று உன்னைத் தொழுவார் உய்வடையார் என்று சொல்லவும் வேணுமோ? நீ உகந்து நிற்கும் மலையே விண் உட்பட எல்லா நன்மைகளையும் கொடுக்கவல்லதாயிற்றே. வழி-வேதவழி - வேதத்தில் காட்டப்பட்ட பக்தி மார்கம். இந்த நெறிப்படி உன்னைத்தொழுபவர் அவ் வேதத்திற்சொன்ன சிறப்பைப் பெறுவர். இதைச் சொல்லவும் வேணுமோ? ஒரு குறையுமின்றி நின் திருமலையே அதைக் கொடுக்குமே என்கிறார.

இன்னுமொன்று:

ஏழுவார் விடைகொள்வார் ஈன்துழாயானை
வழுவாவகை நினைந்து வைகல் -தொழுவார்
வினைச்சுடரை நந்துவிக்கும் வேங்கடமே வானோர்
மனச்சுடரைத்தூண்டும் மலை. (திரு.26)

எம்பெருமானை விட்டு மற்ற பலன்களை விரும்புமவர்கள் - எம்பெருமானையே நித்யமாக அநுபவிக்க விரும்பவர்கள் - இவர்களிடையே வாசியின்றி

யாவருடைய பாபங்களையும் போக்கி அவரவர் வேண்டும் பயனைப் பெறுவிப்பது திரு வேங்கடமாமலை. இம்மலையே நித்ய ஸூரிகளின் மனதை அவன நீர்மையை அநுபவிக்கும்படி கிளரவிக்கும். எழுவார் - பொன்னையும் பொருளையும் மேல்மேலும் விரும்புவார். விடைகொள்வார் - பரிசுத்த நிலையில் ஜீவாத்மாவை அநுபவிக்கும் பொருட்டு அவனிடமிருந்து விலகுமவர். ஈன்துழாயானை - துழாயணிந்த திருமாலை விட்டுப்பிரியாமல் மனதிற்கொண்டு தொழுவார். இப்படி மூன்று வகைப்பட்டவரின் பாபமாகிற நெருப்பை அணைக்கும். நித்யர்களின் அநுபவத்தை ப்ரகாசிப்பிக்கும் - ஒளி விடச்செய்யும். மண்ணவர்க்கும் விண்ணவர்க்கும் விரும்பியடையும் வெற்பாய்த்திகழ்கிறது.

திருமழிசைப்பிரான் தமது ஆதரத்தால் நமக்கிடும் கட்டளை:

*சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை*
*நின்று வினைகெடுக்கும் நீர்மையால்* (நா. திரு.42)

'சென்னியோங்கு தண் திருவேங்கடம்' (பெரியாழ். திரு. 5-4-1) என்னும்படியே, புறப்பட்டவாறே கண்டு துன்பமெல்லாம் துலைந்து இன்புறும்படி வானளாவி நிற்கும் உயர்ந்த சிகரங்களையுடைய திருவேங்கடமலையைச் சென்று வணங்குங்கோள். அத்திருமலை தனதியல்பாகவே உங்கள் பாபங்களையெல்லாம் போக்கி உய்விக்கும். 'குமரன் நிற்கும் பொழில் வேங்கடமலைக்கே போங்குமரருள்ளீர் புரிந்து' (44). கால்படைத்த பயன் பெற சோலைவாய்ப் புள்ள திருவேங்கடமலைக்கு உங்களுக்கு வயதுள்ளபோதே (உடலிலும் நெஞ்சிலும் திட்முள்ளபோதே) கால்நடையாடும்போதே சென்று சேருங்கோள். நித்யயுவாவான (பாலாஜி) ஸ்வாமி நிற்கும் மலையன்றோ அது? 'வேங்கடமே நாடுவளைத்தாருதுமேல் நன்று' (46) திருவேங்கடமலையை நாட்டிலுள்ளவர் யாவரும் அறிவுடையார், அறிவில்லாதார் என்ற வாசியற சுற்றி வலம் செய்து ஆடிப்பாடினால் நலனுண்டாகும் - இம்மை மறுமைகளில் நற்பயன்கள் பயக்கும் என்கிறார்.

*வேங்கடமே விண்ணோர்தொழுவதும், மெய்மையால்*
*வேங்கடமே மெய்வினைநோய் தீர்ப்பதுவும்-வேங்கடமே*
*தானவரை வீழத்தன்னாழிப்படை தொட்டு*
*வானவரைக்காப்பான் மலை* (48)

திருமலை உபாயமாகவும் (ஆறாக) வேறொன்று ப்ராப்யமாகவும் (அடையும் பேறாக) ஆகையன்றிக்கே, இம்மலைதானே ப்ராப்யமாக நித்யஸூரிகள் பற்றுவர்கள். கட்டாயம் அநுபவித்தே தீர்க்கவேண்டிய பாபங்களையும் நோய்களையும் போக்கி ஸுகமளிப்பதும் இத்திருமலையே. அஸுரர்கள் தரைப்படும்படி திருக்கையில் திருவாழியேந்தி தேவர்களை வாழ்விப்பவன். உகந்து வாஸம் செய்வதும் இத்திருமலையே. ஆக, இத்திருமலையைப்பற்றி எல்லா அநிஷ்டங்களும் கழியப்பெற்று எல்லா இஷ்டங்களையும் அடையப்பெறலாம் என்கிறார்.

'எய்த்திளைப்பதன் முன்னம் அடைமினோ, பைத்தபாம்பணையான் திருவேங்கடம், மொய்த்தசோலை மொய்பூந்தடந்தாழ்வரே (திருவாய் 3-3-10) என்பது நம்மாழ்வார் அருளும் உபதேசம். கைகால்களாகிற கரணங்கள் பலங்குன்றி அதனால் மனச்சோர்வும் ஏற்படும் முன்னரே செறிந்த சோலையையும் பரப்புமாறப்பூத்த பொய்கையையுமுடைய திருமலையின் திருத்தாழ்வரையைச் சென்றடையுங்கோள். அத்திருமலையே எம்பெருமானுக்கு மிகவும் ப்ரியனான திருவநந்தாழ்வான் (பாம்பணை). திருமலையை இளமையிலேயே அடைவதால் யாது பயன் எனில்: 'அமர்ந்து வானவர் கோனொடும் நமன்றெழும் திருவேங்கடம் நங்கட்குச் சமன் கொள்வீடு தரும் தடங்குன்றமே' (3-3-7) நித்ய ஸூரிகள் தங்கள் தலைவரான ஸ்ரீஸேநாபதியாழ்வானுடன் பொருந்தி திருவாராதனத்துக்கான உபகாரங்களுடன் வந்து தொழுதெழுவது இத்திருமலையையே. இம்மலையே சமன்கொள் வீடு தரும். சமன்கொள் வீடாவது: "நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி" என்று தம்மையே ஒக்கஅருள் செய்யப்பெறுவது. தடங்குன்றம் - **விசாலமானது.**

பெருமாளும் பிராட்டியுமாக இட்டப்படி ஸஞ்சரிக்க இடைமுடைத்து. வீடு - மோக்ஷாநந்தம். எம்பெருமானைத் தமது திருமுடியிலே எழுந்தருள்வித்துக் கொண்டுள்ள திருமலையாழ்வார் தாமே அவனுடைய பூவார்கழல்களை நம் முடிமேல் வைத்திடவேண்டும் பேற்றை (தடங்குன்றமே) தந்தருள்வர். 'பரன் சென்று சேர் திருவேங்கடமாமலை ஒன்றுமே தொழ நம்வினையோயுமே' (3-3-8). பரன் - ஸர்வஸ்மாத்பரனான ஸர்வேச்வரன். ஸர்வரக்ஷகனுமாய் ஆச்ரித ரக்ஷகனுமாயுள்ளவன். சேன்று சேர் திருவேங்கடமாமலை - அவன் தனக்கு உத்

தேச்யமாக உகந்து வாஸம்பண்ணும் பெருமைபெற்ற மேலான திருமலை. ஸ்வாமிக்கு உத்தேச்யமானது தாஸர்களான நமக்கும் உத்தேச்யமாகச் சொல்ல வேணுமோ? ஒன்றுமேதொழ நம்வினை ஓயுமே - அநாதிபாய்ச் சேர்ந்துள்ள பாபங்களெல்லாம் அடியோடு போய்விடும். திருமலையாழ்வாரைத் தொழுதாலே இது நடந்துவிடும். திருவேங்கடமுடையானும் வேண்டா. திருமலையாழ்வாரே அமையும், நம் வினைகளைக்களைந்தெறிய.

வேங்கடத்தைச் சென்று தொழவும் வேண்டா. அவரவர் இருப்பிலிருந்தே நினைத்துப்பாடினால் (பேரைச் சொன்னால்) போதும். எல்லா நலன்களும் பெறலாம். தாம் பெற்றதைத் திருமழிசைப்பிரானார் நன்றிப்பெருக்குடன் கூறக் கேளீர்.

வெற்பென்று வேங்கடம் பாடினேன், வீடாக்கி
நிற்கின்றேன், நின்று நினைக்-
கின்றேன் கற்கின்ற
நூல்வலையில் பட்டிருந்த நூலாட்டி
கேள்வனார்
கால்வலையில் பட்டிருந்தேன் காண்.
(நா திரு. - 40)

ஒருபொழுதுபோக்காகப் பல மலைகளின் பெயர்களை குருவிமலை, கோலமலை, என்பது போல் திருவேங்கடமலை என்று சொன்னேன். இது என்னையுமறியாமல் நடந்ததொன்று. இதன் பயன் யாதெனில், வீடாக்கிநிற்கின்றேன். 'மீட்சியின்றி வைகுந்தமாநகர் மற்றது கையதுவே என்னும்படி பரமபதம் நம் கையிலங்கு நெல்லிக்கனி என்றுப்போல் ஸித்தமெனப்பெற்றதை உணருகிறேன். என்ன ஆச்சரியமிது!' என்று ஈடுபடுகிறேன். நூல்வலையில் - நன்னூல் என்று போற்றப்படும் சாஸ்த்ரங்களில் (வேதத்தில்) த்ருடப்பரமாண ஸித்தனாகப்பட்டிருக்கும் நூலாளன் - நூலாட்டி தம்கேள்வனார் (திருமகள் கேள்வன்) திருவடிகளாகிற வலையில் சிக்கியுள்ளேன். இவை திருமலையின் பெயர் சொன்னதால் யாம் பெற்ற பயன் என்கிறார். அவன திருநாமத்தைப்போல அவனுகந்து வாழும் மலையின் திருநாமமும் அவன் திருவடிகளில் அன்பை வளர்த்து வீடுபெறுவிக்கும் என்பது கருத்து.

உன் மலையின் பெயரை அஹ்ருதயமாகச் சொல்லவே நீ வந்து என்னுள்ளம் புகுந்தாய். திருவேங்கடவா! உனது மலையை வந்து காண மிகவும் ஆசைகொண்டுள்ளேன என்கிறார் மேலே.

காணலுறுகின்றேன் கல்லருவி
முத்துதிர
ஓணவிழவில் ஒலியதிர-பேணி
வருவேங்கடவா! என்னுள்ளம்
புகுந்தாய்
திருவேங்கடமதனைச் சென்று.
(நா திரு. 41)

எப்போதும் பேரொலி செய்துகொண்டுவரும் மலையருவிகளில் முத்துக்கள் உதிரப்பெற்றதும், 'நீ பிறந்த திருவோணம்' எனும் திருவோணத்திருவிழாவில் திருப்பல்லாண்டு பாடுவோர், வேதமோதுவோர் சொல்லொலிகள் நிரம்பப்பெற்றதும், பலர்பல திசைகளிலிருந்து உன்னைக் காண்பதோராசையினால் வந்து குழுவப்பெற்றதுமான திருவேங்கடமாமலையில் உகந்து வர்த்திப்பவனே! அம்மலையை விட்டு நீவந்து என்னெஞ்சில் வந்து "வந்தாய்! என் மனம் புகுந்தாய், மன்னி நின்றாய், நந்தாத கொழுஞ்சுடரே!" (திருமொழி 1-10-9) என்கிற படியே பொருந்தி இருந்துவிட்டாயாகிலும் நீ உகந்த அந்தத்திருமலையைச் சென்று காண என மனதில் ஆசைமிகுந்துள்ளது.

அத்திருமலைதான் எத்தகையது? எனில்

நன்மணிவண்ணனூர் ஆளியும்
கோளரியும்
பொன்மணியும் முத்தமும் பூமரமும்-
பன்மணிநீ
ரோடுபொருதுருளும் கானமும்,
வானரமும்
வேடுமுடை வேங்கடம்.
(நா திரு. 47)

பெருப்பெருத்த யாளிகள், வலிமிக்கசியம் (சிங்கம்), பொன், மணி (ரத்நங்கள்), முத்துக்கள், பூத்துக்குலுங்கும் மரங்கள், பலவகைப்பட்ட ரத்நங்கள் அருவிகளிலே கலந்து உருண்டு விழப்பெற்ற காடுகள், வானரங்கள், வேடர்கள் (குறவர்), இவர் (இவை) திரண்டு வாழும் ஊர் எங்கள் மணிவண்ணனுடைய உகந்தருளின நிலம். அம்மணிவண்ணனைத் தொழ விண்ணவர்களும் மன்னவர்களும் 'எம்பெருமான் பொன்மலையில் ஏதேனுமாவேனே' (பெருமாள் திரு. 4-10) என்று விரும்பும்படி மேற்சொன்னபடியெல்லாம் பலவுருவுகளில் வந்துவாழ்வார்கள். இவர்கள வாழப்பெற்ற தலமே திருவேங்கடம். 'காட்டில் வேங்கடம்' (நாச். திரு. 4-2) என்றுளிறே ஆண்டாள் பிராட்டியும. இங்கு ஓர் ஐதிஹ்யம் நினைத்தற்குரியது. ஸ்ரீராமானுஜரின் அம்மானும் ஆசார்யருமான திருமலைநம்பி ஒருமுறை திருமலையிருந்து இழிந்துவரும் போது கையில் பெருமாள

முது செய்த ப்ரஸாதத்தையும் கொண்டுவந்தார். கீழே வந்து பார்த்தபோது அதில் எறும்புகள பலவிருக்கககண்டு தம்முடன் வந்த சிஷ்யரிடம் "எந்த நித்யஸூரி எறும்பாய் திருமலையில் இருந்து அப்பனை ஸேவித்திருந்தாரோ! அவர்களை நாம் கீழே அழைதது வந்துவிட்டோமே. இது மாபெரும் பாபமல்லவோ? இப் ப்ரஸாத மூட்டையை மலையிலே கொண்டு வைத்து வாரீர்" என்று அனுப்பியருளினாராம். இப்பாசுரத்தில் யானையைச் சொல்லாவிடினும் சேர்த்துக்கொள்ளவேணும். ஏனெனில்: ஆழ்வான் கண்டபடி இது: 'வைப்பன் மாவிளக்கா மாமதியை மாலுக்கென்றெப்பொழுதும் கைநீட்டும் யானை' 4 திரு.-46) என்று. சிறந்த இந்த சந்திரனைத் திருவேங்கடவனுக்கு மங்களதீபமாக அவன் திருமுன்பே ஸமர்ப்பிக்ககடவன் என்று ஆசைப்பட்டு அச்சந்திரனைப்பிடிக்கும் முயற்சியில் எப்போதும் துதிக்கையை உயர நீட்டிபடியே இருக்குமாம் திருமலையில் வாழ்யானை. பேயாழ்வார் காணும் காட்சியிது:

புகுமதத்தால் வாய்பசிக்கீழ்
தாழ்ந்து அருவி
உகுமதத்தால் கால்கழுவிக்கையால்
மிகுமதத்தேன்
விண்டமலர் கொண்டு விறல்
வேங்கடவனையே
கண்டு வணங்கும் களிறு.
(3 திரு. 70)

யானையின் தலையினின்றும் மதஜலம் அருவிபோலே பெருகிக்கொண்டிரா நின்றது. அம் மத ஜலத்திலேயே யானை கைகால் அலம்பி, வாய் கொப்பளித்து, ஆசமநம் பண்ணி, மிகுந்தமதமூட்டும் தேனைப்பெருக்கிப் பூத்துள்ள மலர்களைப் பறித்து திருவேங்கடமுடையான் திருவடிகளிலே இட்டுத் தொழாநின்றது. அங்குள்ள வானரங்களின்படியுமிதுவே.

போதறிந்து வானரங்கள் பூஞ்சுனை-
புக்கு, ஆங்கலர்ந்த
போதரிந்து கொண்டேத்தும் போது
உள்ளம் - போது
மணிவேங்கடவன் மலரடிக்கே
செல்ல
அணிவேங்கடவன் பேராய்ந்து.
(2 திரு. 72)

இப்பாசுரத்தின் போது எனும் சொல் பலபொருள்களில் நாலு இடங்களில் வருவது காண்க. போதறிந்து - காலத்தை உணர்ந்து; போதரிந்து - பூவைப்பறித்து; போது- உள்ளம்-மனமே நீயும் வா; போதும் அணி - புஷ்பங்களையிட்டு அர்ச்சிக்கக்கடவாய். சிற்றஞ் சிறுகாலையில் காலமுணர்த்த உணர்ந்தெழுந்த குரங்குகள் அங்குள்ள சுனைகளில் புகுந்து நீராடி அங்கு அப்போதலர்ந்த புஷ்பங்களைப் பறித்து வந்து திருவேங்கடவன் திருவடியில் ஸமர்ப்பித்துத் துதித்தேத்துகின்றன. என்மனமே! நீயும் அப்படியே செய்ய வாராய். அழகிய அத் திருமலையில் உகந்தேழுந்தருளியுள்ள பெம்மானின் திருநாமங்களை வாயினரல் பாடி அவன் திருவடித்தாமரைகட்கே யாம்படி அநந்யப்ரயோஜநமாக மலர்களை அணிவிக்கக்கடவாய். குரங்குகள் படியை உதாரணக்கித் தம் திருவுள்ளத்தை அக்குரங்குகளையடியொற்றி வேங்கடவானனை பஜநம் பண்ணச்சொல்லுகிறுர்.

ஆழ்வார் திருமலையில் கண்ட சில மனங்கவரும் காக்ஷிகள்.

ஊரும்வரியரவம் ஒண்குறவர்
மால்யானை
பேரவெறிந்த பெருமணியை-
காருடைய
மின்னென்று புற்றடையும்
வேங்கடமே மேலசுரர்
எம்மென்னும் மாலதிடம்.
(1 திரு. 38)

குறவர்கள் மலைப்பிரதேசத்தில் புனமமைத்து தினைமுதலான தானியம் பயிரிடுவர். அங்குள்ள யானைகள் அப்புனங்களிடம் வந்தால் அக்குறவர்கள் கல்லாலடித்துத் துரத்துவர்கள். மலைமேல் பெருமணிகள் (ரத்நங்கள்) சிதறிக்கிடக்கும். அவற்றையே எடுத்து யானையைக்குறித்து வீசுவர். அப்படி வீசும்போது அம்மணியொளியை அங்கு ஊரும் பாம்புகள் மேகத்திடையே தோன்றும் மின்னலென அஞ்சி தம் புற்றுள்ளே புகும். இப்படியுள்ள திருமலை நித்யஸூரிகள் 'எங்கள் திருமால்' என்று அபிமானிக்கும் பெருமானுடைய இடம். பெரிய வில்லையும் அம்புகளையுமுடைய குறவர்கள் இரவில் தீப்பந்தங்களைக் கொண்டு யானைகளை விரட்டுவர். வானில் நக்ஷத்ரம் விழக்கண்டயானை அது குறவர் எறிந்த தீப்பந்தம் என்று திகைத்து நிற்கும் திருமலை (40)

யானைகளிடையே ஒரு காதல் காக்ஷி காணீர்:

பெருகுமதவேழம் மாப்பிடிக்கு
முன்னின்று
இருகணிளமூங்கில் வாங்கி -
அருகிருந்த
தேன்கலந்து நீட்டும் திருவேங்கடங்-
கண்டீர்
வான்கலந்த வண்ணன் வரை.
(2 திரு. -75)

மதநீர் பெருகப்பெற்ற ஆண் யானை தனதன்பிற்கு

ரிய பெண்யானை (பிடி)யின் முன் நின்று இரண்டு கணுக்களுடைய மூங்கில் குருத்தைப் பிடுங்கி அருகிலிருந்த கொம் புத்தேனில் தோய்த்து பிடி வாயில் ஊட்டுமிடமே முகில் வண்ணனான எம்பெருமான் உகந்து வாழும் மலையாம். வடவானாய்! என்று அப்பனையே யானையாக அழைப்பதால் அவன் பிராட்டியை உகப்பிக்கும்படியை இங்குக் கூறுவதாகக் கொள்ளலாம். அன்பின் முதிர்ச்சி ஊடலாக மாறும் காட்சி இதோ:

புரிந்துமதவேழம் மாப்பிடியோடூடித்
திரிந்து சினத்தால் பொருது-
விரிந்தசீர்
வெண்கோட்டு முத்துதிர்க்கும்
வேங்கடமே, மேலொருநாள்
மண்கோட்டுக்கொண்டான்மலை.
(3 திரு. -45)

பெரிய மத்தகஜமானது தன் அழகிய பிடியோடு கலந்த பின் ஊடல் பிறந்து, அதனால் பிரிந்து திரிந்து, தன் கோபத்தினால் தனது பெரிய வெண்மையான தந்தங்களினால் மலையிலுள்ள மணிப்பாறைகளைக் குத்த, அவற்றினின்றும் சிறந்த முத்துக்கள் உதிர்கின்றனவாம். இத்தகைய திருமலையே முன்பு ஆதிவராஹமாய் தன் கோட்டிலே (பல்லிலே) பூமியை எடுத்தவனுடைய மலையாம்.

குரங்குகளிடையே ஒரு காதல் காட்சி காணீர்:

தெளிந்த சிலாதலத்தின் மேலிருந்த
மந்தி
அளித்த கடுவனையே நோக்கி-
விளங்கிய
வெண்மதிலம் தாவென்னும்
வேங்கடமே மேலொருநாள்
மண்மதியில் கொண்டுகந்தான்
வாழ்வு
(3 திரு. -58)

திருமலையில வட்டமான கற்பாறையில் ஒரு மந்தி (பெண் குரங்கு) தனது காதல் நாயகனுடன் (கடுவன்) அவனையே ஆசையுடன் நோக்கியிருக்க, "உனக்கு யாது வேணுமாயினும் கொணர்ந்து கொடுப்பேன" என்ற தன காதலனிடம், "அதோ அருகில் விளங்கும் வெணணிலவை எனக்கு விளையாட கொண்டு வா" என்று கேட்கிறதாம். தன புத்தியின சிறப்பால் பூமியை மாவலியிடமிருந்து மீட்ட உலகளந்தான் மலை இது. இன்னுமொரு காட்சி. ஒரு கடுவன் மலைச சுனையருகில் கரிய பெரிய களாப்பழங்களைப் பறித்துத் தின்னும்போது சுனையில் தன் நிழலைக்கண்டு அது தனக்குப் போட்டியாய்க் கனிபறித்துண்ணும் வேறொரு கடுவனென நினைத்து "நானே இங்கே முன்பு வந்தேன். நீ இந்த கனிகளைப் பறிக்கக் கூடாது. பறித்தவைகளைக கொடுத்து விடு" என்று கைநீட்டிக்கேட்கிறதாம். இதுவே கன்றினால் விளங்கனி உதிர்த்த கண்ணன் மலை. (3 திரு. 68)

திருமலைமேல் வேங்கைப் புலியும் உண்டு. ஓங்கி உயர்ந்து நிற்கும் மலைச்சிறகரத்தைத் தொட்டு உராய்ந்து நிற்பதுபோலத் தோன்றுகிறது சந்திரன். சந்திரன் நடுவே முயல்போல் தோன்றும் ஒரு கரிய வடிவம் உண்டே. அதை ஒரு முயல் என்றே எண்ணி அதைப்பிடித்துத் தின்பதற்காக அதையே கோபத்துடன் பார்த்து நிற்கிறதாம் வேங்கை. 'ஊர்ந்தியங்கும் வண்மதியின் ஒண்முயலை சேர்ந்து சின வேங்கை பார்க்கும் திருமலையே, ஆயன் புனவேங்கை நாறும் பொருப்பு' (3திரு 75) ஆயன்-இத்யாதி - மணங்கமழும் மலர்கள் பூத்துத் தொங்கும். வேங்கை மரங்கள் நிறைந்ததும், கோவலனான கண்ணபிரானுடையதுமான திருமலை இது.

இத்தகு திருமலையின உச்சியென நிற்கும் திருவேங்கடமன்னனின பண்புகள் சில - ஆழ்வார்கள் கண்டபடி:

* சென்னியோங்கு தண் திருவேங்கடமுடையாய்! உலகுதன்னை வாழநின்ற நம்பீ!
* குளிரருவி வேங்கடத்து என்கோவிந்தன்.
* செடியாயவல்வினைகள் தீர்க்கும் திருமாலே! நெடியானே! வேங்கடவா!
* விண்ணவர்கோன் விரையார் பொழில் வேங்கடவன்.
* தேனே! திருவேங்கடமாமலைமேய கோனே!
* சிந்தாமணியே! திருவேங்கடம்மேய எந்தாய்!
* வேடார் திருவேங்கடம் மேய விளக்கே!
* தென்னாதெனாவென்று வண்டுமுரல் திருவேங்கடத்து என்னானை, என்னப்பன்.
* கட்டெழில் சோலை நல்வேங்கடவாணன்.
* எண்ணம்புகுந்து தித்திக்கும் அமுதே! இமையோர் அதிபதியே! திருவேங்கடத்தானே!
* அகலகில்லேனிறையுமென்று அலர்மேல் மங்கையுறைமார்பா!
* நிகரில் புகழாய்! உலகமூன்றுடையாய் என்னையாள்வானே!
* நிகரிலமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே!
* வேதப்பொருளே! என் வேங்கடவா!
* விண்ணோர்தொழும் வேங்கடமாமலைமேய அண்ணா!

திருவேங்கடத்தானே! உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேனே.



# ஸ்ரீவேங்கடேச ப்ரபத்தி

ஸ்ரீமான் உ.வே. திருமலை
அநந்தாண்பிள்ளை க்ருஷ்ணமாசாரியர் - திருப்பதி.

ஸ்தோத்ரத்தைத் தலைக் கட்டி ப்ரபத்தியிலே இழிகிறுர். முன்பு ஸ்தோத்ரத்தில் 'அஜ்ஞா நிநா மயா தோஷாந் அசேஷாந விஹிதாநஹரே, க்ஷமஸ்வ த்வம் க்ஷமஸ்வ த்வம் சேஷசைல சிகாமணே' (11) என்று விரோதி நிவ்ருத்தியையும், 'ப்ரியம் வேங் கடேச ப்ரயச்ச' என்று இஷ்டப் ராப்தியையும் உண்டு பண்ணும் படி ப்ரார்த்தித்தார். அதற்கு எம்பெருமான் பாபநிவ்ருத்தியை யும் நித்யஸேவா ப்ராப்தியை யும் வெறுமனே வேண்டிக் கொண்டால் மட்டும் போதுமா? அவற்றுக்கு உபாயமாகக் கர் மஜ்ஞாந பக்திகளில் நீர் எதை அனுஷ்டித்தீர்? பலமென் பது உபாய ஸாத்ய மென் பதை நீர் அறியீரோ?' என்று கேட்டானாக வைத்து, 'ஸ்வாமீ திருவேங்கடமுடையானே அறி விலியும் ஆற்றலில்லாதவனும் விசிஷ்ய தேவரீருக்கு ஸர்வாத் மநா பரதந்த்ரனுமான அடியே னிடம் தேவரீர் அருளிய உபா யங்களில் ஏதும் இருக்க ப்ர ஸக்தி இல்லை. 'ஸர்வ தர் மாந் பரித்யஜ்ய மாமேகம் சர ணம் வ்ரஜ, அஹம்த்வா ஸர் வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச:' (பகவத்கீதை 18-66) பக் திகள் முதலிய எல்லா தரு மங்களையும் விட்டு (=உபாய மாக நினையாமல்) என்னொ ருவனையே உபாயமாக உறு தியுடன் நினைக்கக் கடவாய்- நான் உன்னை, என்னையடை யத் தடையாக உள்ள பாபங் கள் எல்லாவற்றில் நின் றும் விடுவிக்கிறேன். வருந் தாதே... என்று முன்பு அர் ஜுநனை வ்யாஜமாக்கி அருளிச் செய்தது அடியேன்போல்வார்க் கன்ருே? ஆகையால் தேவரீர் திருவடிகளையே தஞ்சமாகப் பற் றுகிறேனென்று விடையிறுத்து, ப்ரபத்தியை அநுஷ்டிக்கிறுர் இது தன்னில்.

ஈசாநாம் ஜகதோ஽ஸ்ய வேங்கட
பதேர்விஷ்ணோ: பராம் ப்ரேயஸீம்
தத்வக்ஷஸ்ஸ்தலநித்யவாஸரஸிகாம்
தத்க்ஷாந்திஸம்வர்த்திநீம் ।
பத்மாலங்க்ருத பாணிபல்லவயுகாம்
பத்மாஸநஸ்தாம் ச்ரியம்
வாத்ஸல்யாதிகுணோஜ்ஜ்வலாம்
பகவதீம் வந்தே ஜகந்மாதரம் ।। (1)

(ப) அஸ்ய ஜகத: = இந்த உலகிற்கு, ஈசாநாம் = தலைவி யும், வேங்கடபதே: விஷ்ணோ: = வேங்கடமலைநாயகனான திரு மாலுக்கு, பராம் ப்ரேயஸீம் = உயர்ந்த மனைவியும், 'தத் வக்ஷஸ் ஸ்தல நித்யவாஸ ரஸி காம் = அத்திருமாலின் திரு மார்பகத்தில் எப்போதும் தங் கியிருப்பதில் ஆசையுடையவ ளும், தத் க்ஷாந்தி ஸம்வர்த் திநீம் = அவனுடைய பொறு மையை வளரச் செய்பவளும், பத்ம அலங்க்ருத பாணி பல் லவ யுகாம் = கமலமலர்க ளால் அலங்கரிக்கப்பட்ட தளிர் போன்ற கைககளையுடையவ ளும், பத்ம ஆஸந ஸ்தாம் = தாமரை மலராகிய ஆசனத்தில் இருப்பவளும், வாத்ஸல்ய ஆதி குண உஜ்ஜ்வலாம் = பேரன்பு முதலிய குணங்களால் விளங் குமவளும், ஜகந் மாதரம் = உல கிற்கு அன்னையும், பகவதீம் = பூஜிக்கத் தக்கவளுமான, ச்ரி யம் = லக்ஷ்மிதேவியை, வந்தே = வணங்குகிறேன்.

(க) ஒரு தாமரைமலர் தன்னை ஏந்த இரு தாமரை மலர்களை இரு கைகளால் தானேந் தித் திருவேங்கடவன்திருமார் பில் இறையும் அகலாது உறைந்து, அவனது அன் பைப் பெற்ற மனைவியாய், நம் மிடம் பேரன்பு பூண்டு நமக்குத் தாயாய், தந்தையான பெரு மாள் நம் குற்றங் கண்டு சீறும லிருக்குமாறு அவனது பொறு மையை வளர்த்து நம்மை அவனோடு சேர்ப்பிக்குமளாய், நமது பூஜைக்குரிய தலைவி யாய் விளங்கும் திருமகளை வணங்கித் துதிக்கிறேன்.

(வி) ஈசாநாம்...ப்ரேயஸீம் = இதனால் 'அஸ்யேசாநா ஜகதோ விஷ்ணுபத்நீ' (யஜுஸ்ஸம் 4-4-12) இவ்வுலகிற்குத் தலைவி யும் விஷ்ணுவிற்கு மனைவியு மாகிறுள் பிராட்டி என்னும் ச்ருத்யர்த்தம் அனுவதிக்கப்பட் டது.

தத்வக்ஷஸ்ஸ்தல - ரஸிகாம் - இதனால் பிராட்டி முதன் முத லாகத் திருமார்பில் ஏறி வீற்றி ருந்த கடல் கடைந்த சரிதமும், 'ப்பலேக்ரஹிர்ஹி கமலாலாபேந ஸர்வச்ரம:' (ஸ்ரீரங்க- உத்தர-55) என்று பட்டர் அருளியபடியே தன் மார்பின் சுவடறிந்து ப்ரீ தியோடு வந்து சேர்ந்த பிராட் டியைப் பெற்றதனால் எம்பெரு மான் கடல் கடைவதற்காகத் தான் ஏற்றுக்கொண்ட வருத்த மெல்லாம் பலிக்கப் பெற்றமை யும் நினைவுபடுத்தப்பட்டது.

தத்க்ஷாந்தி ஸம்வர்த்திநீம் - பெருமானது திருமார்பின் போக்யதையை அனுபவிப்பதற்காக மட்டும் திருமார்பில் பிராட்டி உறையவில்லை. எம்பெருமானைத் தஞ்சமடைவதற்காக வருகின்ற சேதநர்களிடம் பாபங்களைக் கண்டு அவனுக்கு வரும் கோபத்தை ஆற்றி, அவனிடம் அமுங்கிக் கிடந்த - பாபங்களைப் பொறுத்தலென்னும் குணத்தைத் தலையெடுக்கச் செய்து அதனை மேன்மேலும் வளர்ப்பதற்காகவும் பிராட்டி பெருமான் திருமார்பில் உறைகின்றுளென்கின்றது இதனால்.

பத்மாலங்க்ருத... பத்மாஸநஸ்த்தாம் - திருவேங்கடமுடையானுடைய திருமார்பில் எழுந்தருளியிருக்கும் நாச்சியார்க்கு இரண்டு திருக்கைகள் தான் என்பது நினைவு படுத்தப்படுகிறது இதனால். 'த்விபுஜா வ்யூஹலக்ஷ்மீ: ஸ்யாத் பத்மபத்மாஸந ப்ரியா, ஸ்ரீநிவாஸாங்க மத்யஸ்த்தா ஸுந்தராம் கேசவப்ரியா' (வராக புரா - முதற்பகுதி - வேங்-மா- அத்7) பத்மாஸநமாகத் திருவடிகளைக் கட்டிக்கொண்டு வீற்றிருப்பதில் விருப்பமுள்ளவளும் ஸ்ரீநிவாஸனுடைய திருமேனியின் நடுப்பகுதியான திருமார்பில் இருப்பவளுமான - இரண்டு திருக்கைகளையுடைய வ்யூஹலக்ஷ்மியானவள் கேசவனான ஸ்ரீனிவாஸனுக்கு, மிகவும் ப்ரியையாக இருக்கிறாள் என்றது காண்க.

ச்ரியம் - புருஷகாரமாகவதற்காக நம்மால் அடையப்படுகிறாள் என்றும், நமக்குப் புருஷகாரம் செய்வதற்காக எம்பெருமானை அடைந்திருக்கிறாள் என்றும் ஸ்ரீசப்தத்தின் பொருள்கள் இங்குக் கருதுக.

வாதஸல்யாதி குணோஜ்ஜ்வலாம் - 'நிகரில் வாத்ஸல்யம் உஜ்ஜ்வலம்' (ஆசார்ய ஹ்ருதயம் - 160) என்று அருளியபடியே திருவேங்கடமுடையானிடம் ஆச்ரிதர்களுடைய தோஷங்களை போக்யமாகக் கொளளுந் தன்மையாகிய வாத்ஸல்யம் உஜ்ஜ்வலமாவதற்குக் காரணம் இவளுடைய புருஷகாரமேயாகையால் இவள் வாதஸல்யாதி குணங்களால் உஜ்ஜ்வலையாயிருப்பது கைமுதிகந்யாயஸித்தமன்றோ?

பகவதீம் - ஜ்ஞாநம் சக்தி முதலிய குணங்களால் மிக்கவள் என்றபடி.

எம்பெருமானார் கத்யத்தில் பெரியபெருமாளைச் சரணம் புகுகிறவர், முதலில் பகவந்நாராயணேத்யாதி சூர்ணையால் பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாவதற்காகச் சரணம் புகுந்தாற்போல, இவரும் அடுத்தச்லோகம் தொடங்கித் திருவேங்கடமுடையானைச் சரணம் புகுகின்றவராய் இந்த ச்லோகத்தால் அவன்திருமார்பில் இறையும் அகலகில்லாமல் உறையும் அலர்மேல்மங்கை நாச்சியாரைப் புருஷகாரமாவதற்காகச் சரணம் புகுகிறார் என்க. வந்தே என்பதும் ,சரணம் ப்ரபத்யே என்பதும் பர்யாயம்.

ஸ்ரீமந் க்ருபாஜலநிதே க்ருத ஸர்வலோக
ஸர்வஜ்ஞ சக்த நதவத்ஸல ஸர்வசேஷிந்
ஸ்வாமிந் ஸுசீல ஸுலபாச்ரித பாரிஜாத
ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ॥ (2)

(ப) ஸ்ரீமந் = திருமகளைப் பிரியாதவனே, க்ருபா ஜலநிதே = கருணைக்கடலே, க்ருத ஸர்வ லோக = புவனமெல்லாம் படைத்தவனே, ஸர்வஜ்ஞ = அனைத்தும் அறிந்தவனே, சக்த = வல்லமையுடையவனே, நத வத்ஸல = வணங்கினவர்களிடம் அனபு மிக்கவனே, ஸர்வசேஷிந் = எல்லோரையும் குற்றேவல் கொள்ளுமவனே, ஸ்வாமிந் = தலைவனே, ஸுசீல = தன் பெருமை பாராமல் தாழ்ந்தவரோடும் கலப்பவனே, ஸுலப = அடைய எளியவனே, ஆச்ரித பாரிஜாத = அடைந்தவர்க்கு அனைத்தும் அளிக்கும் பாரிஜாதமே, ஸ்ரீவேங்கடேச = திருவேங்கடமுடையானே, (தவ) சரணௌ = (உன்) திருவடிகளை, சரணம் ப்ரபத்யே = தஞ்சமாகப் பற்றுகிறேன்.

(க) திருமகளை வசப்படுத்திய நீ கருணைக்குப் பரவசனாய்ப் புவனம் படைத்து, அனைத்தும் அறிந்து அறிந்தபடியே செய்து முடிக்கும் திறமையுடையவனாய் அவதரித்து, வணங்கியவர்களிடம் அன்புடன் குற்றேவல் கொண்டு, தலைவனாய்த் தாழ்ந்தாரோடும் கலந்து, அடைந்தார்க்கு அனைத்தும் அளித்துக்கொண்டு திருமலையில் முளைத்த பாரிஜாதமோ என்னும்படி எளியவனாய் நின்ற திருவேங்கடமுடையானே, உன் திருவடிகளைச் சரணம் அடைகின்றேன்.

(வி) இதில் தவ என்றொரு பதத்தைச் சேர்த்துக்கொண்டு அதனை, சரணௌ என்பதனோடு பொருத்திப் பொருள் கொள்க. மேலுள்ள சில ச்லோகங்களிலும் இவ்வாறே கொள்க.

இந்த ச்லோகத்தில் த்வய பூர்வகண்டார்த்தங்கள் நிறைந்துள்ளமை அனுபவிக்கத்தக்கதாகும். ஸ்ரீமந் என்றதனால் - த்வய பூர்வகண்டத்தில் புருஷகாரபூதையான பிராட்டியின் நித்ய ஸம்பந்தம் பெருமானுக்கு உள்ளதாகத் தெரிவிக்கும் ஸ்ரீமத் பதத்

தின் அர்த்தம் கூறப்பட்டது.

அப்பிராட்டியின் புருஷகார பலத்தினால (நமக்காக எம்பெருமானிடம் பரிந்துரைக்கும் வார்த்தையின் வன்மையினால்) பெருமானிடமுள்ள - தஞ்சமடைந்த பாபியை ஏற்றுக்கொள்ளாமல் தண்டிப்பதற்குக் காரணமான சுதந்திரத்தன்மை தலைசாயந்த பின்பு அவனை ஏற்றுக்கொள்வதற்கு உறுப்பாகத் தலையெடுக்கும் குணங்களையுடையவனென்னும் பொருள்படும் - த்வயத்திலுள்ள நாராயண சப்தத்தின் பொருள் இதில் பல சொற்களால் குறிக்கப்படுகின்றது.

அக்குணங்கள் - ஆச்ரயண ஸௌகர்யாபாதகங்கள் என்றும் ஆச்ரித கார்யாபாதகங்கள் என்றும் இரு வகைப்படும். நாம் எம்பெருமானைப் பற்றுதல் என்பது நம்மால் முடிந்த காரியந்தான், முடியாத காரியமன்று ஏன்பதைத் தெரிவிக்கும் குணங்கள் முதல் வகையிலும், பற்றின நமது பகையை அறிந்து போக்கி விருப்பத்தை நிறைவேற்றுதற்கு உதவி செய்யும் குணங்கள் இரண்டாம் வகையிலும் சேரும். நாம் நீங்காமல் அவனைப் பற்றுதற்கும் பற்றின நம்மை அவன் நீக்காமல் கைக் கொள்ளுதற்கும் உரிய அவனுடைய நற்புண்புகளென்றும், பற்றிய நமது காரியம் செய்வதற்குரிய அவனுடைய தகுதிப்பபண்புகளென்றும் இவற்றை முறையே குறிப்பிடல்தகும்.

நாம் பகவானைப் பற்றுமல் நீங்குவதற்குக் காரணம் அச்சமும் ஐயமும் அத்ருப்தியும் அருமையும் ஆகும். இவற்றை முறையே வாத்ஸல்யமும் ஸ்வாமித்வமும் ஸௌசீல்யமும் ஸௌலப்யமுமாகிய குணங்கள் நீக்கி நம்மைப் பற்றச் செய்கின்றன. அச்சமாவது - பாவிகளாகிய நாம் பகவானைப் பற்றினால் அவன் நம்மைக் கைக்கொள்ளமாட்டான். அதற்கு மாறாகத் தண்டிக்கவே செய்வான் என்று நினைத்தலால் உண்டாமது, பாவங்களாகிய தோஷங்களை போக்யமாக - குணமாகக் கொள்ளுதலாகிய அவனுடைய வாத்ஸல்யத்தை நினைத்தால் அவ்வச்சம் நீங்கப்பெறும். ஐயமாவது - பகவானுக்கும் நமக்கும் என்ன ஸம்பந்தம்? ஆகையால நம் காரியம் செய்வானோ செய்யமாட்டானோ என்பதேயாகும். நமக்கு வரும் லாப நஷ்டங்களைத் தனது லாபநஷ்டங்களாகவே கருதுவதற்குரிய அவனுடைய ஸ்வாமித்வத்தை (உபய விபூதிக்கும் தலைவனாயிருக்குமிருப்பை) நினைத்தால் அவ்வையம் அகலப்பெறும்; அத்ருப்தியாவது - அவன் எளியோமான நமக்கு மட்டும் ஸ்வாமியோ? ப்ரஹ்மாதிதேவர்கட்கும் நித்ய ஸூரிகட்கு முட்பட ஸ்வாமியன்றோ? மிக மேம்பட்ட அவர்கள் காரியத்தைச் செய்வானேயன்றி நம் காரியம் எங்கே செய்யப்போகிறானென்னும் மனவமைதியின்மையேயாகும். மிகப் பெரியவனாகிலும் மிகத் தாழ்ந்தவர்களாகிய நம்மோடும் வேறுபாடின்றிக் கலந்து பழகும் தன்மையாகிய அவனது ஸௌசீல்யத்தை நினைத்தால் அவ்வத்ருப்தி தணியப்பெறும். இத்தனையிருந்தும், நாம் அவனைக் கண்டல்லவா பற்ற வேண்டும். 'கண்கள் காண்டற்கு அரியனாய்' (திருவாய் 3-6-11) என்று அவன் கூறப்பட்டிருக்கிறானே என்று அவனுடைய அருமையை - காணமுடியாமையை நினைத்தால், பரமபதநாதன் காண்டற்கு அரியனாயினும் 'பின்னானார் வணங்கும் சோதி' (திருநெடு 10) என்னும் அர்ச்சாவதாரவெம்பெருமான்களுடைய - அனைவர் கண்களுக்கும் இலக்காந்தன்மை என்னும் ஸௌலப்யம் நினைவுக்கு வந்து அவ்வருமை நினைவைப் போக்கும். இவ்வாறு இந்நான்கு குணங்களும் மேற்கூறிய அச்சம் ஐயம் அதிருப்தி அருமைநினைவு என்பவற்றை முறையே போக்கி, எம்பெருமானை நாம் பற்றுதல் ஸுகரமே = நம்மால் இயன்ற காரியந்தான் என்று அறிவிப்பதனால் ஆச்ரயண ஸௌகர்யாபாதகங்கள் ஆயின. இக்குணங்கள் நான்கும் இந்த ச்லோகத்தில் நதவத்ஸல ஸ்வாமிந் ஸுசீல ஸுலப என்ற நான்கு விளிகளாலும் கூறப்பட்டுள்ளன. ஸுலப என்பதன் விவரணமே - ஸ்ரீவேங்கடேச என்பது. திருவேங்கடமலையில் வானரங்கட்கும் அவற்றோடொத்த வேடுவர்க்கும் உட்படக் கண்ணுக்கிலக்காகி நின்று 'அடிக்கீழமர்ந்து புகுந்து அடியீர் வாழ்மின்' (திருவாய் 6-10 -11) என்று தனது ஹஸ்த முத்ரையால் காட்டிக் கொண்டு நிற்குந்தன்மையன்றோ 'ஸ்ரீவேங்கடேச' என்பதன் உள்ளுறைபொருள்.

இனி ஆச்ரித கார்யாபாதகங்களான ஜ்ஞாநம் சக்தி ப்ராப்தி பூர்த்தி க்ருபை என்ற இக்குணங்களும் இந்த ச்லோகத்தில் கூறப்படுவதைக் காண்போம். தன்னைப் பற்றியவனுடைய விரோதியான பாபம் இன்னதென்றும், விருப்பம் இன்னதென்றும் தெரிந்துகொள்வதற்கு ஜ்ஞானமும், அறிந்தபடியே விரோதியைப் போக்கி விரும்பியதை நிறைவேற்றிவைப்பதற்கு சக்தியும், பற்றியவனை ஏற்றுக்கொண்டால் அத

னால் உண்டாகும் பயன் தன்னுடையதே என்கைக்கு உறுப்பான ப்ராப்தி என்ற சேஷித்வமும், இவனுக்குக் காரியம் செய்யும் போது இவனிடம் கைம்மாறாக ஒன்றையும் எதிர்பாராமலிருக்கைக்கு உறுப்பான பூர்த்தி என்னும் அவாப்த ஸமஸ்த காமத்வமும், இவையெல்லாம் இருந்தும் பற்றுகிறவனது துக்கங்கண்டு இரங்காதபோது பயனில்லையாகையால் பிறரது துன்பங்கண்டு பொறுமை என்ற க்ருபையும் - பற்றுமவனது காரியம் செய்கைக்கு வேண்டியனவாக, பற்றப்படும் எம்பெருமானிடத்தில் அவச்யமாக இருக்கவேண்டும். இந்த ச்லோகத்தில் ஸர்வஜ்ஞ என்று அறிவும், சக்த என்று ஆற்றலும் ஸர்வசேஷிந் என்று ப்ராப்தியும், க்ருபாஜலநிதே என்று க்ருபையும் கூறப்பட்டன. வேண்டுவார்க்கு மற்ற பொருள்களையும் தன்னையும் வழங்கும் வள்ளன்மையுடையவனென்று பொருள்படுகின்ற ஆச்ரிதபாரிஜாத என்பது - பொருளற்றவனது வள்ளல் தன்மை பயன்படாமையினால், வேண்டிய எல்லாச் செல்வங்களும் நிறையப்பெற்றமையாகிய பூர்த்தியையும் குறிக்கின்றது.

இங்ஙனம் ஸ்ரீமந் என்பதனால் த்வயத்தில் ஸ்ரீமத் சப்தார்த்தமும், மற்ற விளிகள் பலவற்றால் நாராயண சப்தார்த்தமான இருவகைப்பட்ட குணங்களும், சரணௌ சரணம் ப்ரபத்யே என்பது அப்படியே அனுவதிக்கபட்டமையும் காண்போர்க்கு இந்த ச்லோகம் த்வயம்பூர்வகண்ட விவரணமென்பது நன்கு விளங்கும்.

இனி இதில் க்ருதஸர்வலோக என்னும் விளிக்கு, சரணாகதி செய்யும் ப்ரகரணத்தில் என்ன ஸம்பந்தம் என்று கேட்க வேண்டா. க்ருபாஜலநிதே என்றதற்கு அடுத்துள்ள இவ்விளியானது - கேவல க்ருபையினால் அடியேனையுள்ளிட்ட இவ்வுலகங்களைப் படைத்த தேவரீர், சரணாகதி செய்யும் அடியேனுடைய காரியத்தையும் (நித்ய ஸேவையையும் = இங்கு, நித்ய ஸேவையையும் பின்பு பரமபதத்தில் ஸதாதர்சனத்தையும்) கேவலக்ருபையாலே நிறைவேற்றியருள வேணுமென்னும் ப்ரார்த்தனையைக் குறிப்பாகக் காட்டுகின்றதாகையால் இதற்கு இங்கு மிகமிக ஸம்பந்தம் உண்டென்று கொள்ளத்தகும்.

இன்னும் 'ஸ்ரீமந் க்ருபாஜலநிதே க்ருதஸர்வலோக' என்னும் சொற்றொடரை மட்டும் தனித்து நோக்கினால், பிராட்டியினால் தலையெடுத்த க்ருபைக்குக் கடலாய், அப்பிராட்டியின் விளையாட்டுக்காக எம்பெருமான் உலகங்களைப் படைத்தானென்ற கருத்தும் தோன்ற இடமுண்டு. 'அண்டாந்.... ஸஹஸ்ரமகரோத் தாந் பூர்ப்புவஸ்ஸ்வர்வத: ஸ்ரீரங்கேச்வர தேவி தே விஹ்ருதயே ஸங்கல்பமாந: ப்ரிய:' (ஸ்ரீகுண-19) ஸ்ரீரங்கத்தின் தேவியே உன் மணவாளன் உனது விளையாட்டிற்கென்றே ஸங்கல்பம் செய்து கொண்டு பூலோகம் புவர்லோகம் ஸுவர்லோகம் ஆகிய இவற்றையுடைய பல அண்டங்களை ஸ்ருஷ்டி செய்தான் என்று பட்டர் அருளிச்செய்ததை இங்கு ஸ்மரித்தல் யுக்தம்.

**ஆநூபுரார்ப்பிதஸுஜாத ஸுகந்தி புஷ்ப**
**ஸௌரப்யஸௌரபகரௌ ஸமஸந்நிவேசௌ ।**
**ஸௌம்யௌ ஸதாநுபவநேபி நவாநுபாவ்யௌ**
**ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ।। (3)**

(ப) ஸ்ரீவேங்கடேச = திருவேங்கடமுடையானே, ஆநூபுர அர்ப்பித = (திருவடிச்) சிலம்புவரையில் சேர்க்கப்பட்ட, ஸுஜாத ஸுகந்தி புஷ்ப ஸௌரப்ய = நல்ல ஜாதியாகையால் நறுமணங்கமழும் புஷ்பங்களின் பரிமளத்திற்கும், ஸௌபரகரௌ = பரிமளந்தருமவைகளும், ஸமஸந்நிவேசௌ = ஒன்றுக்கொன்று ஒத்தனவாய் அமைந்தவைகளும், ஸௌம்யௌ = மங்களகரமானவைகளும், ஸதா அநுபவநேபி = இடைவிடாமல் ஸேவித்துக் கொண்டிருந்தாலும், நவ அநுபாவ்யௌ = புதியன போல் அனுபவிக்கத் தகுந்தவைகளுமான, சரணௌ = (உன்) திருவடிகளை, சரணம் ப்ரபத்யே = தஞ்சமாகப் பற்றுகிறேன்.

(க) திருவேங்கடவனே, மங்களகரங்களாய் ஒன்றுக்கொன்று பொருந்திச் சேர்த்தியழகை உடையவைகளாய், வைத்த கண் வாங்காமல் ஸேவித்துக்கொண்டேயிருந்தாலும் தெகுட்டாமல் ஸேவிக்கத்தக்கவைகளாய், ஸமர்ப்பித்த பின்பே இவை நல்ல ஜாதிப் புஷ்பங்கள் என்றும் நறுமணம் கமழுகின்றன என்றும் தோன்றக்கூடிய மலர்களால் சிலம்புகளும் தெரியவொட்டாமல் மறையும்படி அர்ச்சனை செய்யப்பட்ட உன் திருவடிகளைச் சரணம் அடைகின்றேன்.

(வி) ஸுஜாத ஸுகந்தி புஷ்ப ஸௌரப்ய ஸௌரபகரௌ - நறுமணங்கமழும் நல்ல ஜாதிப் புஷ்பங்களின் நறுமணத்திற்கும், திருவேங்கடமுடையானுடைய திருவடிகள் நறுமணமூட்டுகையாவது 'ஸர்வகந்த:' (ச்சாந்தோக்யம் 3-25) எல்லாவகையான நறுமணங்களுமுடையவன் என்று

பேசப்பட்டவனுடைய திருவடிகளாகையாலே, அளவுபட்டதும் அழிவுடையதுமான ப்ராக்ருத புஷ்பங்களின் நறுமணத்திற்கு, அளவற்றதும் அழிவற்றதுமான தமது பலவகைப்பட்ட அப்ராக்ருத நறுமணமாயிருக்குந் தன்மையை உண்டாக்குகையேயாம்.

ஸதாऽநுபவநேऽபி நவாநுபாவ்யௌ - 'எப்பொழுதும் நாள் திங்களாண்டூழியூழி தொறும் அப்பொழுதைக்கப்பொழுது என்னாராவதமுதமே' (திருவாய் 2-5-4) என்கிறபடியே எத்தனை காலம் அனுபவித்தாலும், அனுபவித்த பழைய திருவடிகளாகத் தோன்றாமல் புதியனவாகத் தோற்றுதற்குக் காரணமான அப்ராக்ருதமான அழகு பெற்றிருக்கும் திருவடிகளென்றபடி. 'க்ஷணே க்ஷணே யத் நவதாமுபைதி ததேவ ரூபம் ரமணீயதாயா:' (மாகம் - 4வது ஸர் -17 ச்லோ) எப்பொருள் கணந்தோறும் புதுமையை அடைகின்றதோ அதுவே (உண்மையான) அழகின் ஸ்வரூபமாகும் என்பது இங்கு நினைக்கவுரியது.

இப்படிப்பட்ட பொருளை ஸம்ஸ்க்ருதஜ்ஞர்கள் 'ஆஸேசநகம்' என்ற சொல்லால் வழங்குவர். 'தத் ஆஸேசநகம் - த்ருப்தே: நாஸ்தி அந்த: யஸ்ய தர்சநாத்' (அமரகோசம் 3-1-53) எந்த வஸ்துவைப் பார்த்துக் கொண்டிருந்தால் பார்க்கவேணுமென்னும் ஆசை தீராதோ (பார்த்தது போதுமென்ற எண்ணம் உண்டாகாதோ) அந்த (அழகிய) பொருள் ஆஸேசநகமெனப்படும் என்றது காண்க. த்ருப்தி: = ஆசை.

**ஸத்யோவிகாஸி ஸமுதித்வர**
**ஸாந்த்ரராக**
**ஸௌரப்ய நிர்ப்பர ஸரோருஹஸாம்ய**
**வார்த்தாம் ।**
**ஸம்யக்ஷு ஸாஹஸபதேஷு**
**விலேகயந்தௌ**
**ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம்**
**ப்ரபத்யே ।। (4)**

(ப) ஸ்ரீவேங்கடேச = திருவேங்கடமுடையானே, ஸத்ய:விகாஸி ஸமுதித்வர = அப்போதே மலர ஆரம்பித்து மேன்மேலும் மலரும் இயல்புடையனவாய், ஸாந்த்ரராக = மிகச் சிவந்தனவாய், ஸௌரப்ய நிர்ப்பர ஸரோருஹ = மணமும் நிறையப்பெற்ற தாமரை மலர்களோடு, ஸாம்யவார்த்தாம் (அபி) = (இத்திருவடிகள்) ஒத்தனவென்று பேசினால்கூட அதை, ஸம்யக்ஷு ஸாஹஸ பதேஷு = உயர்ந்த முரட்டுத்தனத்திற்கு இலக்கான காரியங்களில் (ஒன்ருக), விலேகயந்தௌ = எழுதி வைக்கும்படி செய்யவல்ல, சரணௌ = உன் திருவடிகளை, சரணம் பரபத்யே = சரணம் அடைகிறேன்.

(க) திருவேங்கடவா, நன்ருய்ச் சிவந்து, அலர்ந்துகொண்டே, பறிக்கப்படாமல் குளத்திலேயே இருந்து மணமும் நிறைந்துள்ள தாமரைகளோடு இத்திருவடிகள் ஒப்புமையுடையனவாய் இருக்குமா என்று சந்தேகமாய்ப் பேசினாலும், அப்பேச்சும் உயர்ந்த முரட்டுத்தனங்களில் தலையானது என்பதைக் கல்வெட்டாக்குகிற, சிவந்து மணங்கமழ்ந்து மலர்ந்த உன் திருவடிகளைச் சரணமடைகிறேன்.

(வி) இதில் ஸமுதித்வர சப்தம் - ஸம் உத் இவ்விரண்டினையும் உபஸர்க்கமாகப் பெற்ற இண் - கதௌ என்னும் தாதுவின்மேல், ஸ்வபாவம் என்ற பொருளில் க்வரச் ப்ரத்யயம் வந்து நிஷ்பந்தமானது. இது ஸரோருஹத்திற்கு (தாமரை மலருக்கு) அடைமொழி. இதனை ஸம் உத் இத்வர என்றும், ஸம் உதித்வர என்றும் ஸமுதித்வர என்றும் கொண்டு, அழகு மென்மை மணம் முதலியவை நன்ருக உயர்ந்து இங்ஙனமே மேன்மேலும் செல்லும் தன்மையை உடைய தாமரைகள் என்றும், நன்ருக உதிக்கும் (வளரும்) தன்மையை உடைய தாமரைகள் என்றும், ஸமுதாயமாக (இரு திருவடிகளுக்கு உபமானமாகச் சொல்லும்படி இரண்டும் ஒன்று சேர்ந்து) இருத்தலையே ஸ்வபாவமாக உடைய திருவடிகள் என்றும் முறையே பொருள் கொள்ளல் தகும்.

இதுதன்னில் திருவேங்கடமுடையானுடைய திருவடிகளுக்கு உபமானமாக்குவதற்காகத் தாமரை மலர்களை சிக்ஷிக்கிருர் - அப்போதே அலருமவையாக இருக்கவேண்டும். இரண்டும் ஒன்ருகச் சேர்ந்தேயிருக்கவேண்டும். மிகச் சிவந்தனவாக இருக்கவேண்டும். நறுமணம் மிக்கனவாக இருக்க வேண்டும் என்று அவற்றை இத்தனை அருமைப்படுத்தியும் அவற்றைத் திருவடிகளுக்கு உபமானமாகச் சொல்லலாமோ என்று பார்த்தால் சொல்லமுடியாது. அப்படி ஒருவேளை சொன்னால் அது ஸாஹஸமான (ஆராயாமல் முரட்டுத்தனமாகச் சொன்ன) பேச்சு என்று பெருமானுடைய திருவடிகளே நாம் ஸேவித்த மாத்திரத்திலேயே நமக்குக் கல்வெட்டுப் போல் உறுதிப்படுத்துகின்றன என்கிருர் - 'ஸம்யக்ஷு ஸாஹஸ பதேஷு விலேகயந்தௌ' என்பதனால். 'கட்டுரைக்கில் தாமரை நின் கண் பாதம் கையொவ்வா' (திருவாய் 3-1-2) என்ற ஆழ்வார் ஸ்ரீஸூக்தியை இங்கு ஸ்மரிக்க.

(தொடரும்)



# விநாயகர்

திருமதி. உமா ஹரிஹரன் - ஆலப்புழை.



ஓம்காரஸ்வரூபர விநாயகர். எந்தக் காரியமும் விநாயகருக்கு பூஜை செய்த பிறகே தொடங்கப்படுகிறது. "வி" என ருல் இல்லாதது. வேகமில்லாத விவேகம். தனக்கே நாயகனாக யாவருக்கும அருள்செய்ய, விநாயகன் என்ற பெயர் பெற்ருர.

பதினோராம் திருமுறையில கூறுவதாவது:

"திருவாக்கும் செய்கருமம்
கைகூட்டும் செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கும்
உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனை
முகத்தானைக்
காதலால் கூப்புவார்தம் கை"

**ஏகதந்தர் :**

ஆடு வாகனத்தில வந்து மகாசூரலை வதம் செய்தார்.

**வக்ரதுண்டர் :**

சிம்ம வாகனத்தில் வந்து மத்சரசூதனை வதம் செய்தார்.

**கஜானனர் :**

மூஞ்சுறு வாகனத்தில் வந்து லோபாசூரனுக்குக் காட்டி கொடுத்து மோட்சமும் கொடுத்தார்.

**மஹோதரர் :**

ஆடு வாகனத்தில் வந்து மேஹாசூரனைக்கொன்ருர்.

**லம்போதரர் :**

ஆடு வாகனத்தில் வந்து க்ரோதா சூரனை வதம் செய்தார்.

**விகடர் :**



மயில் வாகனத்தில வந்து ஸம்ஹாரம் செய்தார்.

**விக்னராஜர் :**

மமதா சூரனை சேஷவாகனத்தில் வந்து போரிட்டார்.

**தூம்ரவர்ணர் :**

அபிமானா சூரனுக்கு ஆடு வாகனத்தில் காட்சி கொடுத்து தன்னுடன் ஐக்கியமாக்கிக் கொண்டார்.

நம்மிடம் உள்ள எட்டு அசுரத்தன்மைகளும், இந்த எட்டு அவதாரத்தை நினைத்த மாத்திரத்திலேயே அழியும். அவை காமம், குரோதம், லோபம், மோகம், மதம, மாச்சரயம், மமதை, அபிமானம ஆகியவை ஆகும.

பிளளையார குழநதையாக இருநதபோது, சனிபகவான அவரை பாரததால, தலை துண்டானது. சிவபெருமான தனது கணஙகளை ஏவி, வடககே தலை வைத்து படுககும ஏதாவது ஒரு பிராணியின தலையை கொண்டுவரும படி கூற, அவர்கள் யானை தலையை கொண்டு வந்து கொடுத்தனர். அதை கணபதிக்கு சிவபெருமான ஒட்ட வைததாக "சிவபுராண" வரலாறு கூறுகிறது.

உமையவள் தனக்கு காவலாக ஒருவீரனை உண்டாக்கியதாகவும், அவ்வீரன் சிவபெருமானை தடுக்க, இதனால் கோபம் கொண்ட சிவபெருமான், பரசு என்னும் ஆயுதத்தால் தலையை வெட்ட, உமாதேவி மனம் வருந்தியதால், யானையின் தலையை ஒட்ட வைத்ததாக "மத்சய" புராணம் கூறுகிறது.

உமையவளும், சிவபெருமானும், ஒரு மண்டபத்தில் "ஓம்" என்ற எழுத்தை உற்று நோக்க, அதிலிருந்து, ஆண், பெண் இரு யானைகளாக தோன்றி, அவற்றின் சேர்க்கையால் யானை முகத்தை உடைய குழந்தை பிறந்ததாக "கந்த புராணத்தில்" கூறப்படுகிறது.

மாயையில் தோன்றியது உலகம். இந்த உலகை செயல்பு

டுத்த "ஏகதந்தன்" தோன்றினார். "ஏகதந்த" என்ற இரண்டு சொல் நமக்கு இதை உணர்த்துகிறது. இதை "முத்கல புராணம்" கூறு கிறது. "யதோ வேதா யதோ ஜகத்" என்ற வியாசரின் மொழி நமக்கு கஜமுகனின் தத்து வத்தை விளக்குகிறது.

யானையின் மஸ்தகத்தில் இரண்டு முண்டு உண்டு. அந்த முண்டுகள் இருக்கும் இடத்தை மனதில் நினைத்துக்கொண்டு நாம் நெற்றியில் குட்டிக்கொள்ள வேண்டும். அவைகள் தான் யானையின் மர்மஸ்தானம். நம் மூளையை தூண்டிவிட இவ் வாறு செய்கிறோம்.

திதிகளில் உயர்ந் தது சதுர்த்தி. விநயாகரின் திதி.

"ஏதத் சதுர்த்யாம் ஸம்பன்னம் கணுத்யக்ஷஸ்ய ஸர்வதா"

மோட்சத்தை அளிக்க வல்ல வர். சுக்ல சதுர்த்தி என் பது வளர்பிறையை குறிக்கும். இது கணபதி ஆராதனைக்கு விசேக்ஷமானது. ஆவணி வளர்பிறை சதுர்த்தி மிகவும் விசேஷம். அருகம் புல்லால் சதுர்த்தி அன்று அர்ச்சனை செய்து அவரை வலம் வந்தால் செய்த பாவங்கள் எல்லாம் போகும்.எல்லா காரியமும் தடங் கல் இன்றி நடக்கும். இதை ஒரு கதையின் மூலம் அறியலாம்.

"அவந்தி" என்ற நாட்டில் சுல பன் என்ற அரசன் ஆண்டு வந்தான். இல்லை என்று வந்தவர்களுக்குத் தாராளமாகப் பொருளை வழங்குவான். ஒரு ஏழை அந்தணர் உடம்பு முழு வதும் திருநீருடன் மிகவும் மெலிந்த உடலுடனும் அரசரை பார்க்க வந்தான். அள்ளி வழங் கும் சுலபன் இவன் தோற் றத்தை பார்த்து வாய்விட்டுச் சிரித்துவிட்டார். இதனால் கோபம் கொண்ட அந்தணர், "அரசே! நீ என் ஏழ்மையை பார்த்து சிரித்தாய். அது என் உள்ளத்தையே சுட்டது. செல் வம் நிறைய இருக்கும் திமிரில் எல்லோர் முன்னாலும் என்னை அவமானப்படுத்தினாய். என் னைப் பார்த்து சிரித்த நீ ஓர் ஏர் உழும் எருதாகக் கடவாய்" என்று சபித்தார்.

இதைப் பார்த்த அரசி மிக வும் வேதனை அடைந்தாள். அவள் அந்தணரை பார்த்து, "பொறுமை என்பது சிறிதும் இல்லாத அந்தணரே! நீர் ஆத்தி ரப்பட்டு சாபம் கொடுத்து வீட் டீரே? மதி கெட்டு ஆத்திரத்தால் சாபம் போட்ட நீர் ஒரு கழுதை யாக, அழுக்கு மூட்டைகளை தூக்கிக் கொண்டு அவதிபட வேண்டும்" என்று சபித்தாள். அவளும் ஒரு உத்தமி அல் லவா?

இதைக் கேட்ட அந்தணன் 'பெண்ணே! அரசர் செய்த குற் றத்திற்கு நான் சாபம் இட் டேன். அரசரானாலும் குற்றம் குற்றமே! இதை உணராத நீங் கள் என்னைக் கழுதையாகும்படி சபித்தீர்கள். ஆதலால் நீங்களும் சண்டாளப் பெண்ணுக பிறந்து, புலைச்சேரியில் அலையுங்கள்" என்று சபித்தார். மூவருமே சாபத்துக்கு ஆளானார்கள்.

அரசர் எருமையாக மாறி உழ வனிடம் அகப்பட்டு ஏரில் பூட் டப்பட்டான்.

அந்தணர், சலவை தொழிலா ளியிடம் கழுதையாக அகப்பட்டு அழுக்கு மூட்டைகளை சும தான். அரசியோ சண்டாளப் பெண்ணுக சேரிக்குச் சென்ருள்.

விநாயக சதுர்த்தி அன்று விநாயகர் கோவிலில் பல அந் தணர்கள் சூழ பூஜை நடந்து கொண்டு இருந்தது. திடீர் என்று காற்றும், புயலும், வீச, ஒரே சமயத்தில் கோவிலின் உள்ளே எருமையும், கழுதையும், சேரிப்பெண்ணும் தஞ்சம் புகுந் தனர்.

புலைச்சியின் கையில் ஒரு மூட்டை இருந்தது. அது

## பகவான் ஸ்ரீகிருஷ்ணன்

மனம் சஞ்சலமானதுதான். அதை அடக்கமுடியாததுதான். ஆனால் அதை முறையான பயிற்சியினாலும் தியான வைராக் கியத்தினாலும் ஆசைகளைத் துறப்பதனாலும் அதை இழுத்து நிறுத்த முடியும். எவனொருவன் மனத்தைக் கட்டுப்படுத்தவில் லையோ அவனுக்கு யோகம் கிட்டாது. எவனொருவன் மனத்தைத் தன் வயப்படுத்தி முறையான முறையில் முயற்சி செய்கின்றானோ அவனுக்கு எல்லாவித யோகங்களும் கிட்டும்.

பிரதிபலனை எதிர்பார்க்காத அன்பர்கள், நண்பர்கள், விரோதி கள், அலட்சியத்துடன் அசட்டையாக இருப்பவர்கள் தன்னைத் தூற்றுபவர்கள் உறவினர்கள் சாதுக்கள் பாபிகள் இவர்கள் அனைவரிடத்திலும் எப்போதும் ஒரே நிலையான சமநோக்கு டன் இருப்பவனே உயர்ந்தவனாகிறான்.

—ஸ்ரீகிருஷ்ணர்

தொகுத்தவர்: சு. பொன்னம்மாள் - முகலூர்.

நிறைய அருகம்புல் இருந்தது. எருமைக்கும், கழுதைக்கும் நல்ல பசியாக இருந்ததால புலைச்சியின் கையில் இருந்த மூட்டையிலிருந்து புல்லை இழுத்து தின்றது. இதைகண்ட புலைச்சி ஒரு தடியால் எருமையையும், கழுதையையும விரட்டினாள். இதனால் மிரண்ட கழுதையும், எருமையும் அங்கும இங்குமாக ஓடியன.

கோவிலுக்குள் வேதம் ஓதிக்கொண்டிருந்த அந்தணர்கள் மூவரின் அலறல் ஓசை கேட்டு, வெளியே வந்து எருமையையும், கழுதையையும், புலைச்சியையும் துரத்தினார்கள். அப்போது பயங்கரமாக மழை பெய்ததால் புலைச்சி, எருமை, கழுதை மூன்றும் கோவிலையே சுற்றி சுற்றி ஓடினார்கள். அப்படி ஓடும் போது எருமை, கழுதை வாயிலிருந்த அருகம்புல் கீழே விழுந்து கொண்டே இருந்தது. புலைச்சியின் கையில் இருந்த அருகம்புல் கட்டும், பலத்த காற்றினால் கீழே விழுந்து கொண்டே போனது. அப்போது பெரும் காற்று வீசியதால் எருமை, கழுதை வாயிலிருந்து விழுந்த புல்லும், புலைச்சியின் கையிலிருந்து விழுந்த புல்லும் எல்லாம் பகவானின் திருமேனியில் போய் விழுந்தன. பிள்ளையாரின் மேல் விழுந்து விட்டதால், ஆலயம் முழுவதும் அசுத்தமாகிவிட்டதே என்று வருந்திய அந்தணர்கள் ஆலயத்தை சுத்தம் செய்து, பிள்ளையாருக்கு அபிஷேகம் அர்ச்சனைகள் செய்து, நைவேத்யம் வைத்து விட்டு வீட்டுக்கு போய்விட்டார்கள்.

அன்று சதுர்த்திநாள். மூவரின் மூலம் பிள்ளையார் மேல் விழுந்தபுல் அருகம்புல். அவர்கள் மூவரும அடிக்குப் பயந்து கோவிலை சுற்றி, சுற்றி வந்ததால பிரதட்சணம் செய்தவர்கள் ஆனார்கள். அந்தணர்கள அபிஷேகம், அர்ச்சனை, நைவேத்யம செய்தது, இந்த மூவரால அல்லவா? ஆகவே பகவான அவர்கள் மூவரையும் தேவலோகம அழைத்து வர தேவவிமானம் அனுப்பினார்.

இதைக் கண்டு அங்கு கூடியிருந்த மக்கள ஆச்சரியம் அடைந்தனர். எந்த பிறவியானாலும் விநாயக சதுர்த்தி அன்று விநாயகரை வலம் வந்து அருகம் புல்லினால் அர்ச்சனை செய்தால் பிள்ளையார் எல்லா பாக்கியத்தையும கொடுப்பார்.

கழுத்திற்கு மேல் அமைந்திருக்கும் யானை முகம் வேத சொரூபமானது. கழுத்துக்கு கீழே இருக்கும் பாகம் கர்ம காண்டத்தை சுட்டிகாட்டுகிறது. "ப்ரம்பம்" என்றால் மிகப்பெரியது. உடலைவிட முகம் பெரியதாகக் காட்டுவதால் அவ்வுருவம் பரபிரம்மத்தை நமக்கு உணர்த்துகிறது.

"நான்" என்ற கர்வம் கொண்ட உடல் பாதி, யானை முகம் தெய்வம் பாதி அதாவது செயல்படும் போது அறிவு புலன்களின் ஆற்றல் தேவை. அதை தூண்டி விடுபவரே கடவுள். ஆகவே அவர் இதயத்தில் குடிகொண்டுள்ளார்.

பிள்ளையாரின் தந்தம் பரா வித்யா என்னும் சக்தியின் நாத ஸ்வரூபம். கண்கள் பரா, அபரா வித்தை. தும்பிக்கை உத்கீதை என்ற சாம மந்திரம. இவரின் இதயத்துடிப்பு மந்திரங்களின் நாதம். பிள்ளையாரின எல்லா அவயமும், யந்திர, தந்திர சொரூபம். நியாயத்துக்காக தர்மத்துக்காக எதையும் தியாகம் செய்ய வேண்டும் என்று தான தன்னுடைய தந்தத்தை ஒடித்து தியாகம் செய்து காட்டினார்.

பாற்கடலை கடைந்து எடுத்தது அமிர்தம். அந்த அமிர்தமே மோதக உருவில் நாம் நைவேத்யம் செய்கிறோம். உள்ளே பூரணம். பூர்ணம் என்றால் முழுவதும் என்று அர்த்தம். பூர்ணம் என்பது பரபிரம்மத்தைக் குறிக்கிறது. பூர்ணமே ருசியை கொடுக்கும் அது நமக்கு ஆனந்தத்தை கொடுக்கிறது. பரம்மத்திற்கு ஆனந்தம் என்ற அர்த்தமும் உண்டு. ப்ரம்மம் ப்ரபஞ்சமாக காட்சி அளிக்கிறது. இந்த மோதகம் என்ற ஆனந்தத்தை எல்லோருக்கும் வழங்க அதை கையில் வைத்து கொண்டு இருக்கிறார். இதனை ஈசாவாஸ்ய உபநிஷத்தில் காணலாம்.

சதுர்த்தி அன்று விக்னேஸ்வரனை வணங்கி துன்பங்களைப் போக்கி மகிழ்ச்சியுடன் வாழ்வோமாக.



## வணங்கினால்....

விநாயகப்பெருமாள் - வினைகள் தீரும்

முருகப்பெருமாள் - அழகு வீரியம் அறிவு மிகும்

திருமால் - உலக இன்பம் எல்லாம் அமையும்

அம்பிகை - எல்லா சக்தியும் பெற்று தீரனாக விளங்கலாம்.

தொகுத்தவர்: க. பொன்னம்மாள் - முகலூர்.

# தி.தி. தேவஸ்தானத்தாரின் அரும்பொருட் காட்சியகம்

இந்து சமயத்தின் பெருமையினையும், இந்திய மண்ணின் கலாசார அருமையினையும் பிற ருக்கு எடுத்துக் காட்டி, அவை மேலும் சிறப்புறும் வகையில் நாளைய இந்தியனைச் சிந்திக்க வைக்கும் ஒரு வாய்ப்பாக, தி.தி.தே. மேற்கொண்டு வரும் பல முயற்சிகளில் ஒன்றாகத் திகழ்வது தற்போது மேலாண்மையினால் அமைக்கப்பட்டிருக்கும் அருட்பொருட் காட்சியகங்கள். தற்போது திருமலையில் கோயிலுக்கெதிரில் உள்ள ஆயிரங்கால் மண்டபத்தில் செயல்பட்டுக் கொண்டிருக்கும் அரும்பொருட்காட்சியகமானது 27-12-80 அன்று முன்னாள் இந்தியக் குடியரசுத் தலைவர் திரு. என். சஞ்சீவி ரெட்டி அவர்களால் திறக்கப்பட்டது. இங்கு திருப்பதி மற்றும் அதைச் சுற்றியுள்ள இடங்களில் கண்டெடுக்கப்பட்டுள்ள பழங்கால நினைவுச் சின்னங்கள், கோயில்கள் சம்பந்தப்பட்ட வேலைப்பாடுகள், சிற்பங்கள், வைதீகச் சடங்கு முறைகள் யாவும் காட்சிக்கு வைக்கும் எண்ணத்தில் இக்காட்சியகம் உருவாக்கப்பட்டுள்ளது. மேலும், தி.தி. தேவஸ்தானத்தாரிடமும் மற்றைய இடங்களி லும் சேகரிக்கப்பட்ட மர வேலைப்பாடுகள், விக்ரகங்கள், உலோக உருவமைதிகள், இசைக்கருவிகள், போர்க்கருவிகள் இக்காட்சியத்தில் இடம் பெறச் செய்யும் முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டன. மறைந்த அறிஞர் திரு. வேட்டூரி பிரபாகர சாஸ்திரி அவர்கள் ஆந்திர நாட்டு பல ஜமீந் தார்களிடமிருந்து சேகரிக்கப்பட்ட பொருட்களும் இக்காட்சியகத்தை அலங்கரிக்கின்றன. மற்றொரு அரும்பொருட்காட்சியகம் (எஸ்.வி. கோயில்கலை களஞ்சியம்) வைணவ நெறிமுறைகளைச் சித்தரித்தி டும் வகையில் திருப்பதியில் ஸ்ரீகோவிந்தராஜ சுவாமி வடக்கு மாடவீதியில் கச்சேரி நம்மாழ்வார் கோயிலுக்கருகே பெரியாழ்வார் மண்டபத்தில் அமைந்துள்ளது. இக்காட்சியத்தில் வைணவப் பிரி வின் ஆதியும், அதன் வளர்ச்சியும், சிற்பக்கலை, கோயிற்கலை, உருவமைதிகள், ஆழ்வார்கள், திவ்ய க்ஷேத்ரங்கள் மேலும் மற்றைய கலைகள் சம்பந்தப்பட்ட பொருட்கள் இடம் பெற்றுள்ளன.

**வைணவத்தின் ஆதியும் அதன் வளர்ச்சியும் :**

இப்பிரிவில் வைணவ மதத்தின் தொன்மை விளக்கப்பட்டுள்ளது. மகாவிஷ்ணு என்று வேதத் தாலும் ஸ்ரீமந் நாராயணன் என்று உபநிஷத்துக்களாலும் வணங்கப்பெற்று வளர்ந்த திருமால் வழிபாட்டு வரலாறு விளக்கப்பட்டுள்ளது. இத்திருமால் வழிபாடு இன்று நாடு முழுவதும் 200 வழி நிலைகளில் போற்றப்படுகின்றது. வைகானஸம், பஞ்சாராத்ரம் என்ற ஆகம முறைகளில் தென்னாட்டில் வழிபடப்பட்ட வைணவம் பற்றிய. வளர்ச்சி, அட்டவணை முறையில் விளக்கப் பட்டுள்ளது. தொன்மை மிக்க வைணவத்திருத்தலங்களில் காணப்பட்ட சித்திரங்களும், 15-வது நூற்றாண்டைச் சார்ந்த அரிய சிற்ப உருவமைதிகள் குறிப்பாக நாகலாபுரம் திருக்கோயிலில் கிடைக் கப்பெற்றவைகளும் இங்குக் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

**கோயில் நிர்மாண விளக்கங்கள் :** ஆகம மற்றும் சிற்ப இலக்கணப்படிக் கட்டப்பட வேண்டிய கோயில் அளவு முறைகள், கோயில் கட்டுவதற்கு இடம், தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய நியதிகள முறைகள் ஆகியன படங்கள், மாதிரிகள் மூலம் விளக்கப்பட்டுள்ளன.

**சிற்ப அளவு முறைகள் :** ஆண், பெண் சிற்ப உருவமைதிகள் எந்த அளவு முறைகளில் இருந்திட வேண்டும் என்ற விளக்கங்கள் இங்கு இடம் பெற்றுள்ளன.

**சிற்பங்கள் :** விஷ்ணுவின் திருவுருவ அமைதிகள், எந்தெந்த உருவமைதிகளுக்கு எந்தெந்த வகையின ஆடை, ஆபரணங்கள் இருந்திடல்' வேண்டும் என்பதை இப்பிரிவு தெளிவுற எடுத்துக் காட்டுகின்றது.

**ஆழ்வார்கள் :** தென்னாட்டில் வைணவம் தழைத்தோங்க வகை செய்த ஆழ்வார்கள் மற்றும் விசிஷ்டாத்துவைதக் கொள்கையின் தந்தையான ஸ்ரீராமானுஜரின் வைணவத் தொண்டின் சிறப்பு இங்கு விளக்கப்படுகின்றது.

**வைதீகச் சடங்குகள் :** அஷ்டதஸ சம்ஸ்காரங்கள் இப்பிரிவில் விளக்கப்பட்டுகின்றன. பிறப்பு முதல் இறப்பு வரை ஒவ்வொரு இந்துவும் கடைப்பிடிக்க வேண்டிய வைதீக சடங்கு முறைகள் தெளிவுறுத்தப்படுகின்றன. கோயில் வழிபாட்டின் முக்கியத்துவம் இங்குச் சித்தரிக்கப்படுகின்றது. வைணவக் கோயில்களில் பயன்படுத்தப்படும் பாத்திரங்கள், வாகனங்களின் மாதிரிகளும் இங்குக் காட்சி அளிக்கின்றன.

**108 திருத்தலங்கள் :** 108 வைணவத் திருப்பதிகளில் உள்ள கோயில்களின் கட்டிடச் சிறப்பு, சிற பச் சிறப்புக்கள் போன்றவற்றைத் தெரிந்து கொள்ளும் வகையில் 108 கோயில்களின் புகைப்படங்கள் இங்கு இடம்பெற்றுள்ளன.

**கலைகள் :** இப்பிரிவில் திருமாலின் புகழ் பாடிய மெய்யடியார்களின் சிறப்பு தெரிவிக்கப்பட் டுள்ளது. நவீன காலம் வரை சேகரிக்கப்பட்ட விஷ்ணு, சக்தி, ஷண்முகர் போன்ற பல்வேறு கடவுளர்களின் உருவமைதிகள் இங்கு இடம்பெற்றுள்ளன. குண்ட்ரபாக்கத்தில் 3வது ராஜராஜன் கோயிலிலிருந்து எடுக்கப்பட்ட சேகரிப்புகள் இப்பகுதியின் வரலாற்றைச் சிறப்புறக்கூறும்.

அனுமதி நேரம்: காலை 8 மணி முதல் இரவு 8 மணி வரை.

அனுமதிக் கட்டணம்: பெரியோர்: ரூ.1/- சிறுர்: 0-50.

பொறுப்பாளர்.

# திருமலை

டாக்டர் ஏ.வி. ஜெயசந்திரன்

எத்தனையோ இடங்கள் இயற்கை அழகு மிளிர்ந்து இருப்பினும், சில இடங்களில்தான் கருணைவடிவான இறைவன் உகந்து எழுந்தருளுகின்றான். அண்ட சராசரங்களில் நீக்கமற எழுந்தருளும் பரம் பொருள் ஏன் சில இடங்களில் மட்டும் வியாபித்திருக்கின்றான் எனக் காரணம் கூறுவதற்கில்லை. பழங்கால மக்கள் வழிபட்டு, அருள் பெற்று வந்த இடங்களில் தான் கோயில்கள் எழுந்தன. இந்த இடங்களின் சிறப்பு, அங்கு இருக்கும் தீர்த்தங்களாலும் விருக்ஷங்களாலும் மேன்மேலும் பெருகுகின்றது. ஓர் இடம் முன்னைக்கும் முன்னையதாய் வரலாற்றுக் காலங்களுக்கும் முற்பட்டு விளங்கியதா என்பதனை அறிய சில முறைகள் உள. அந்த முறை நிலவியல், மண்ணியல், மனித மன இயல், தொல் பொருளியல் போன்ற துறையினர் வகுத்துத் தந்தவை. அவற்றில் சிலவற்றை முதலில் ஆய்வு செய்வோம்.

சூர்யபிரபை வாகனம்



### நாராயணகிரி

வேங்கடமலை மண்ணியல் ஆராய்ச்சி விற்பன்னர்க்கு ஒரு புதிராக அமைந்துள்ளது. நிலம் தோன்றி, அதில் கருங்கல் தோன்றிய காலம் 2,10,00,00,000 ஆண்டுகள் என விஞ்ஞானிகள் கண்டுபிடித்துள்ளனர். கருங்கல் தோன்றிய காலத்திற்கு 50,00,00,000 ஆண்டுகட்குப் பிறகு பூமியில் ஒரு பிரளயம் தோன்றியது என்றும், அந்தப் பிரளயத்தின் காரணமாக நீர் நிலைகள் மறைந்து, மலைகள் தோன்றின என்றும் விஞ்ஞானிகள் கணக்கிட்டிருக்கின்றனர். 160,00,00,000 ஆண்டுகட்கு முன்பு தோன்றிய புதிய நிலப்பகுதிகள், மலைகள் செம்மை

நிறம் கொண்டவை. இந்தப பிரளய காலத்தில நீர மறைநது மலை எழுநத இடஙகள பாரதத்தில இரணடு. ஒன்று இமயமலை. மற்றொன்று ஸ்ரீசைலம் முதல் வேங்கடம் வரை பரவியுள்ள சேஷாசல நிலப் பகுதி. முன்னது சிவபெருமானுககும், பின்னது நாராயணனுக்கும் உகந்ததாகப் பாரம்பரியம் போற்றி வருகிறது. இரண்டு இடங்களில் மலை செம்மை நிறம் கொண்டவை. இமய மலைப் பகுதியில் கைலாசமும், தென்னகத்துப் பகுதியில் திருமலையும் காலந் தொட்டுப் போற்றப்பட்டு வருகின்றன. நீர்ப்பகுதி மறையும்போது சில சின்னங்களை விட்டுச் செல்லும். அந்த சின்னம்தான் இன்று "சிலா தோரணமாக" அமைந்துள்ளது.

ஆதி மனிதன் இறைவனைத் தொழுவதற்கு என்று சில நில, மலைப் பகுதிகள் அமைகின்றன. இமயமலையில் கைலாசம் போன்று, திருமலையில் நாராயணகிரி சிறப்பிடம் பெற்றது. சுமார் 3000 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த மக்கள், இறைவனின் அடிச்சுவட்டினையும், சூரியனின் வடிவத் திருமேனியினையும் கல்லில் செதுக்கி வழிபட்டனர். அப்படிச்செதுக்கி வழிபட்ட பகுதிதான் நாராயணகிரியின் மேலுள்ள நாராயண பாதம். காலப் போக்கில் பல சின்னங்கள் மறைவது போல, இந்தப் புனித ஆதிகாலத்து மனிதனால் வடித்தெடுத்த நாராயண பொற் பாதத்தை அண்மையில் தேவஸ்தானத்தார் மறைத்து அதன் மேல் சிமெண்டு பூசிப் புதிய கல்பாதம் அமைத்துள்ளனர். ஆயினும் திருமலையில் அரும்பொருளகம் நிறுவும் காலத்தில் பழைய பாதங்கள் படம் எடுக்கப்பட்டன. அந்த புகைப் படத்தினை திருமலையிலுள்ள அரும்பொருளகத்தில் பார்த்து மகிழலாம்.



கல்பவிருக்ஷ வாகனம்

### வராக க்ஷேத்திரம்

தற்போது கோயில் அமைந்த இடம் பல்லாண்டுகளாக வழிபட்ட இடமே. புதிய மண், கல்பரவியுள்ள திருமலையில், கருங்



முத்துப்பந்தல் வாகனம்

"

## பிரம்ம உத்ஸவம்

புரட்டாசித் திருவோணம் திருவேங்கடவனின் பிறந்த நாளாகத் தொன்று தொட்டுக் கருதப்பட்டு வருகிறது. திருவோண நன்னாளுக்கு முன்பாக ஒன்பது நாட்கள் நடைபெறும் மிகப்பெரிய திருவிழா. காலை, மாலை இரண்டு வேளைகளிலும் பல வாகனங்களில் விசேஷ அலங்காரங்களுடன் உத்ஸவ மூர்த்தியான திருமலையப்பன் அமர்ந்து திருவீதி வலம் வருகிறார். வராஹபுராணத்தின் ஐம்பதாவது அத்தியாயம் தெரிவிப்பதாவது: திருமலையில் ஸ்ரீவேங்கடேச்வரருக்கு பிறப்புக்கடவுளான பிரமன் தானே முன்நின்று இத் திருவிழாவை நடத்திவைத்தார். பிரம்மனால் ஏற்படுத்தப்பட்ட உத்ஸவம் ஆகையினாலே பிரம்மோத்ஸவம் என்று வழங்கப்படுகிறது என்று சான்றோர் கூறுவர். கி.பி. 966-ஆம் ஆண்டில் ஒரே ஒரு முறை பிரமன் திருவிழா நடைபெற்று வந்ததாயும் அதன் பின்பு இரண்டு தடவை ஒன்று புரட்டாசியிலும் ஒன்று மார்கழியிலும் நடத்தப்பட்டன என்றும் கல்வெட்டு தெரிவிக்கிறது. திருமலையின் மூன்றும் சுற்றுச் சுவற்றிலுள்ள ஒரு கல்வெட்டு (8-7-1551)-ஆம் வருடத்தில் பதினொரு பிரம்மோத்ஸவங்கள் நடைபெற்றதாகத் தெரிவிக்கிறது. இதன்றியில் ஸ்ரீராம நவமி, ஸ்ரீஜயந்தி, உறிபடி, தீபாவளி, யுகாதி என்னும் தெலுங்கு வருடப் பிறப்பு போன்ற தினங்களில் திருவிழாக்கள் சிறப்பான முறையில் நடந்தேறிவருகின்றன. இப்படி வருடத்தில் 250 நாட்கள் திருவிழாக்களால் நிறைந்தவை. இவைகள் மாதாந்திரத் திருவிழாக்கள் என்றும், விசேடத் திரு விழாக்கள் என்றும் இரண்டு வகைப்படும். ஆர்ஜிதம், சம்பாதித்தல் அல்லது சேமித்துவைத்தல் என்கிற பொருளில் பல நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. இக்காலத்தில் அங்குரார்ப்பணம், (திருமுளை) பாலிகை, த்வஜாரோகணம் (கொடியேற்று விழா) இப்படி ஆரம்பிக்கப்பட்டு காலை, மாலை இருவேளைகளி



**சந்திர பிரபை வாகனம்**

லும் சின்ன சேஷவாகனம், பெரிய சேஷவாகனம், தங்கத்திருச்சி, ஹம்சவாகனம், சிங்க வாகனம், முத்துப்பந்தல், கல்பவிருக்ஷம், சர்வபூபால வாகனங்கள், பல்லக்கு, கருடசேவை, ஹநுமந்த வாகனம், யானை வாகனம், சூர்ய, சந்திரப்பிரபை வாகனம், திருத்தேர், குதிரை வாகனம் இப்படிப் பல வாகனங்களில் திருமலையப்பன் திருவீதிவலம் வருகிறார். குடை, சாமரம், மங்கள வாத்யம், முன்னும் பின்னும் வடமொழி மறையும் தென்மொழிமறையும் பாராயணம், பக்தர்களின் பஜனை புடைசூழ நடைபெறும். இத்திருவிழா காண்போரை இன்பக்கடலில் மூழ்கச் செய்யும். இந்த நாட்களில் கோவிலின் உள் யாகசாலை, ஹோமம், பூர்ணாஹுதி, கொலு, ஆஸ்தானம் முதலியன விசேடமாக நடைபெறும். மாலை வேளைகளில் ஊஞ்சல் சேவையைக் காணக் கண் கோடி வேணும். இந்தத் திருவிழாவின் ஐந்தாம் நாள் இரவு கருடசேவை. மகரகண்டி, லக்ஷ்மீஹாரம் முதலிய விலை மதிப்பில்லா திருவாபரணங்களுடன் மலையப்பன் தரிசனம் தருவது குறிப்பிடத்தக்கது. யானை வாகனம் ஆறாம் நாளிரவு வாகனம். இதற்கு முன்பாக வஸந்த உத்ஸவம் என்று வெள்ளை வஸ்திரங்களால் அலங்கரிக்கப்பட்டு குங்குமக் குழம்புடன் கூடிய சந்தனத்தை வாரி அள்ளி வழங்கிக் கொண்டு பவனி வருகிறார். தேரோட்டு திருவிழா என்கிற முதுமொழிக்கிணங்க திருத்தேரில் எழுந்தருளி, பல்லாயிரக்கணக்கான பக்தர்களுக்குத் தரிசனமளிப்பது சொல்லுக்கு அடங்காத தொன்று. இப்படிப் பல வாகனங்களில் தான் மட்டும் அமர்ந்தும் தமது தேவிமாரான ஸ்ரீதேவி, பூதேவி இருவருடன் அமர்ந்தும் திருவிழாக் கண்டருளுகிறார். திருவிழாவின் கடைசித் தினமான திருவோணத்தன்று சுவாமி புஷ்கரணியில் சக்கரத்தாழ்வாருக்கு நீராட்டம் நடைபெற்றுக் கொடியிறக்கம் (த்வஜாவரோகணம்) நடைபெற்றுத் திருவிழா இனிது முடிவு பெறுகிறது. பின்புறச் சவாரி என்கிற விசேஷமான ஒரு பவனியும் குறிப்பிடத்தக்கது.



கருட வாகனம்　　　　　　　　கஜ வாகனம்

கல் சமவெளியாகத்திகழ்வது கோயில் அமைந்த இடம்தான். இது வியககத்தக்கது. திருவேங்கடவன் அமைந்த இடம் பழமைக்கும் பழமையானது. பிரளய காலத்திற்குப் பிறகு நீர் மறைந்து, கல்லும், மண்ணும் எழும்பியதாகச் சற்றுமுன் பார்த்தோம். கடலின் அடியில் விளங்கிய பூதேவியை மீட்டியவர் வராக மூர்த்தியன்றோ. இதனால்தான் வராக சிவாமிக்கு, திருமலையில் முதல் இடம் அளிக்கின்றனர். அவரது சன்னதியினை வழிபட்ட பிறகே வேங்கடவன் தரிசனம் செய்ய. வேண்டும் என்று ஒரு முறையை வற்புறுத்தி வந்தனர். வருகை தருவோர் பலர் வராக மூர்த்தியினை இன்று வழிபடுவதில்லை. காரணம் பலருக்கு இந்த பாரம்பரியம் பற்றிய தகவல் தெரியாது. தெரிந்து வரும் மக்கள், கூட்டத்தினைக் கண்டு 'கியூ' வரிசையில் நின்று இறைவனை வழிபட்டு ஊர் திரும்பத்தான் நேரம் இருக்கிறது என்று தட்டிக் கழித்துச் செல்லுகின்றனர். ஊழிக் காலத்துக்குப் பிறகு திருமலையில் எழுந்தருளிய எம் பெருமான், வரலாற்றுக்காலம் வரையில் திருமலையில் இடம்கொண்டு, அதனைப் பூலோக வைகுண்டமாக்கி வாழ்ந்து வந்தான்.

## வரலாற்றுக் குறிப்பு

வேங்கடவனைப் பற்றி வரலாற்றுக் காலக்குறிப்பு முதன்முதலாகச் சிலப்பதிகாரம் என்ற சங்கத் தமிழ் இலக்கியத்தில்தான் காண்கிறோம். சிலப்பதிகாரம், மதுரைக்காண்டம். 11-ஆம் காடுகாண் காதையில் வரும் பகுதி சிந்திக்கத்தக்கது. குடமலையிலுள்ள மாங்காடு எனும் ஊரினைச் சார்ந்த மறையோன், தான் வழிபட்டு வந்த தலங்களின் பெருமையினை எடுத்துக் கூறுகிறான். திருவரங்கத்தில் கிடந்த வண்ணத்தில் இருக்கும் திருமேனியைப் புகழ்ந்து, பின் வேங்கடத்தானைப் புகழ்கிறான். அவனுடைய திருக்கோயிலை ஞாயிறும், திங்களும் வழிபடுகின்றனவாம். மேகம் போன்று சங்கும் சக்கரமும் தாங்கி, மலர் மாலை மார்பிலே விளங்க, செங்கண் நெடி



சிங்க வாகனம் ஹம்ஸ வாகனம்

யோன் நின்றவண்ணத்தில் திகழ்கின்றனாம். மறையோன் இக்காட்சியில் ஈடுபட்டு விடுகின்றன். திருமலையில் விளங்கும் எம்பெருமான் திறந்தவெளியில் நெடியோனாய் விளங்கிக் காட்சி தருகிறன் என்ற செய்தி சிந்திக்கற்பாலது. பல்லவர் காலத்தில் 8-ஆம் நூற்றாண்டில் தான் திருமாலுக்கு ஒரு கோயில் எழுந்து அதில் வெள்ளியால் செய்யப்பட்ட கௌத்துக பேரம் சாமவி என்ற பல்லவ வம்ச மாதரசியால் பிரதிஷ்டை செய்யப்பட்டது. இந்த வெள்ளிப் படிமம்தான் இன்று நெடிய மாலின் திருப்பாதத்தினருகே விளங்குகிறது.

பல்லவர் திருப்பணிக்குப் பிறகு முதலாம் இராஜராஜனால் கருவறை மீண்டும் புனருத்தாரணம் செய்யப்பட்டது. இராஜராஜன் காலத்தில் கருவறை உள் சுவர் நீக்கப்படாது அதன் மேலேயே ஒரு சுவர் கட்டப்பட்டது. பதிமூன்றும் நூற்றாண்டில் மீண்டுமொரு திருப்பணி. இராஜராஜனால் கட்டப்பட்ட சுவர்களின் மேல் மீண்டுமொரு சுவர் எழும்பிற்று. இராஜராஜனுடைய காலத்தில் கட்டிய சுவற்றிலிருந்து கல்வெட்டுகள் யாவும் படியெடுக்கப்பட்டு வெளிச்சுவற்றில் பொறிக்கப்பட்டன.

இத்திருப்பணியினை மேற்கொண்ட வீர நரசிம்மயாதவராயர் ஒரு நூதனத்தினை இக்கோயிலில் புகுத்தினார். அது தான் முக்கோடி பிரதஷணப் பாதை. அதாவது, விமானச் சுவற்றினைச் சுற்றிய பாதை. இது ஆண்டுக்கொரு முறைதான் திறக்கப்படும். அந்த நாள் முக்கோடி ஏகாதசியாகும். இது மார்கழி மாதத்தில் வரும். இவர் இராஜராஜனால் கட்டப்பட்ட சுவற்றினை அப்புறப்படுத்தாமல், அதற்கு ஒட்டினாற்போல் மற்றொரு சுவற்றினைக் கோஷ்டங்கள் அமைத்துக் கட்டியிருக்கிறர். ஆய்வு செய்யுமிடத்து மூன்று சுவர்கள் கருவறையினைச் சுற்றியுள்ளன. முதல் சுவர் பல்லவர் சுவர். அதற்கு அடுத்து இராஜராஜன் காலத்தில் கட்டிய சுவர். அதற்கும் அடுத்து நரசிம்ம யாதவராயர காலத்துச் சுவர். இந்த மூன்று சுவற்றிற்கும்

இடையே சிறு இடைவெளியினை அமைத்துக் கட்டியிருப்பது கவனிக்கத் தக்கது.

மரீசியின் விமான அர்ச்சகல்பத்தில் சப்த பிராகாரங்களைப் பற்றியும், அதில் விளங்கும் ஆவரண தேவதைகளைப் பற்றியும் பல குறிப்புகள் வருகின்றன. மரீசியின் நூல் வைகாநசப் பிரிவினைச் சேர்ந்த ஆகம நூல். நரசிம்ம யாதவராயனின் காலத்தில் மரீசியின் நூல் வழக்கில் இருந்தது. கல்வெட்டுச் சான்றுகள் பாரம்பரியச் செய்திகளை ஆய்வு செய்யுமிடத்து நரசிம்ம யாதவராயன் காலமாகிய கி.பி.1250 - 1285 வருடங்களில் அநேகமாகத் தற்போது வழக்கில் உள்ள பல பூஜை முறைகள் இருந்தன எனத் தெரிகிறது. இந்த ஏழு ஆவ்ரணங்கள் எவை எனக் காணலாம்.

### ஏழு ஆவரணங்கள்

முதலாம் ஆவரணம்: வேங்கடவனைச் சுற்றியுள்ள பாதை. வேங்கடவன் கருவறையில் தெய்வ பாகத்தில் பிரதிட்டை செய்யப்பட்டுள்ளான். ஆகவே மானுஷ, பைசாச பாகங்களின் இடைவெளி இருப்பதால் இந்த ஆவரணம் சில்ப ஆகம முறைப்படி தெளிவாக விளங்குவது கண்கூடு. மேலும், மதுரைக்கூடழகர் கோயிலில் இரண்டாம், மூன்றும் மாடியில் அமைந்திருக்கும் நின்ற, கிடந்த கோலங்களைச் சுற்றியுள்ள சுவர்களில் ஆவரண தேவதைகளை வண்ணத்தால் தீட்டியுள்ளனர். ஆகவே இறைவன் அமரும் கோயில்-ஆழ்வாரின் உள் சுவற்றில் ஆவரண தேவதைகளைச் சுவற்றில் ஓவியமாகத் தீட்டுவது ஒரு மரபு. திருமலைக் கோயிலில் "கோயில் ஆழ்வாரின்" திருமஞ்சனக் காலத்தில் சுவற்றின் மீது சந்தன மூலிகைக் குழம்பு தடவுவதால் ஓவியங்கள் மறைவுபட்டன. ★

திருத்தேர்

சக்ர தீர்த்தம்



இரண்டாம் ஆவரணம்: கோயில் - ஆழ்வாருக்குக் கோயிலாக இராஜராஜன் காலத்துச் சுற்றுச் சுவர்கள் பல்லவ சுவர்களுக்குப் பிறகு அமைந்தன. இரண்டு சுவர்களுக்கு ஊடே ஓர் இடைவெளி காணுவதால் இந்த இடைவெளி இரண்டாம் ஆவரணமாக அமைந்திருப்பது கவனிக்கற்பாலது.

மூன்றும் ஆவரணம்: இராஜராஜன் காலத்துக் கட்டிய புறச் சுவர்களில் பல கல்வெட்டுக்கள் காணப்பட்டன. அந்தக் கல்வெட்டுக்களைப் படி எடுத்த பிறகு அதற்கு ஒட்டினாற்போல் மற்றொரு சுவர் நரசிம்ம யாதவராயர் காலத்தில் எடுத்ததெனக் கண்டோம். இந்த இரண்டு சுவர்களுக்கு இடையே உள்ள இடைவெளி மூன்றும் ஆவரணமாக அமைந்திருப்பது கவனிக்கற்பாலது.

நான்காம் ஆவரணம்: இந்த ஆவரணப்பாதைதான் முக்கோடி பிரதக்ஷணப்பாதை. ஆகம வல்லுனர்கள் வைகாநச ஆகம நூல்களை ஆய்ந்து கண்டால், இந்த ஆவரணத்தின் அருகே கர்மார்ச்ச ஸ்தாநங்கள் அமைந்து அந்த ஸ்தாநாதிபதிகளான ஹவிரக்ஷகன், த்வஷ்டா முதலியவர்கள் அமைய இடம் ஒதுக்கி இருப்பதைக் காணலாம்.

ஐந்தாம் ஆவரணம்: விமான பிரதக்ஷணப் பாதைதான் ஐந்தாம் ஆவரணமாக அமைகின்றது. இந்த ஆவரணத்திலும் ஆகமங்களில கூறப்படும் அமைப்புகள் பல உள.

ஆறும் ஆவரணம்: சம்பங்கி பிரதக்ஷணப்பாதையே வேங்கடவன் ஆலயத்து ஆறும ஆவரணம். இந்த ஆவரணப் பாதைக்கு நுழைவாகப் பெரிய கோபுரம் அமைந்துள்ளது.

ஏழாம் ஆவரணம்: மாட வீதிகள் ஏழாம் ஆவரணமாக அமைகின்றன. வேங்கடவனுக்கு அரணாக நான்கு திக்குகளிலும் காவல் தெய்வங்கள் அமைந்தன. வடக்கே திருமலையில் உள்ள கங்கையம்மன். கிழக்கே சக்தி வாய்ந்த க்ஷேத்திர பாலகர். தெற்கே சப்த கன்னியர் (நடைபாதையில் "முழங்கால் முடிச்சு" என்று ஒரு காலத்தில் கூறப்பட்ட இடத்தின் அருகே அமைந்தது). மேற்கே நாராயணகிரிக்குப் போகும் வழியில் உள்ள சக்தி பீடம். இந்த ஆவரண இரகசியங்கள் காலத்தால் மறைந்து போயின. பிற்காலத்தில் தோன்றிய ஆகம விற்பன்னர்கள், கோயிலின் கட்டிட அமைப்பினைச் சீரிய முறையில் அணுகி ஆராயாமல், நுழைவுக் கோபுர வாயிலை மூன்றும் பிராகார வாயிலாகக் கருதி, சங்க நிதி, பதும நிதி படிமங்களை பிரதிட்டை செய்துள்ளனர். திருமலைக் கோயிலில் எழுந்தருளிய ஸ்ரீநிவாசன், ஒரு கலியுக வரதன். தன்னகத்தே மறைத்துவைத்துள்ள கூடார்த்தங்களை விரைவில் காட்டுவதில்லை.

## பஞ்ச பேரங்கள்

ஆகமங்கள் கூறியபடி கரு வறையில் பஞ்சபேரப் படிமங்கள் உள்ளன. அவை மூலவர், கௌத்துகர், பலிமூர்த்தி, அபிஷேக மூர்த்தி, உற்சவர் என்பனவாம்.

மூலவர்: இவர்தான் வேங்கடவன். அவருடைய அழகுத் தோற்றம் கவிகளாலும் வர்ணிக்க முடியாதது. அபிஷேகத்தின் போது எல்லா ஆடைகளும் கலைந்து அவரது திருமேனியினைக் கண்டவர்கள் பெரும் பேறு பெற்றவர்கள். மூலவர், சிற்பியால் கடைந்தெடுக்கப்பட்ட உருவத் திருமேனியா அல்லது இறைவனே இந்த உருக் கொண்டு கண்முன்நிற்கின்றனா என்ற ஐயப்பாடு மேலோங்கி நிற்கின்றது. உலந்தா தேசத்துச் சிற்பியால் கடைந்தெடுககப்பட்ட சிலை எனப் பாரம்பரியச் செய்தி கூறுகிறது. உலந்தா தேசம் என்பது தெய்வ லோகம் போலும். விஷ்ணு படிமங்களை நான்கு விதமாகப் பிரிப்பார்கள். யோக, போக, வீர, அபிச்சார மூர்த்திகள் என. யோக, போக, வீர மூர்த்திகள் கிராமங்களில் பிரதிட்டை செய்யப்பட்டு, அபிச்சார

மூர்த்தி, நதி சங்கமம், காடுகளின் ஊடே, கடற்கரை முதலிய இடங்களில் பிரதிட்டை செய்யப்படும். பொதுவாக, அபிச்சார மூர்த்திகளுக்கு வாமாசார முறையில் பூஜைகள் நடைபெறும். இந்த மூர்த்திகள் அனேகமாக இரு கைகளுடனேயே காட்சி தருவார்கள். இதற்குப் பல எடுத்துக்காட்டுகள் உள்ளன. மாமல்லபுரக் கடற்கரைக் கோயிலில் கிடந்த நிலையில் உள்ள படிமம் அபிசார மூர்த்தியாகும். அதே போல், திருச்சானூர் என்ற அலமேலு மங்காபுரத்துக் குளக்கரை அருகே வைத்திருக்கும் கிடந்த கோலப் படிமமும் அபிசார மூர்த்திதான். அபிசார மூர்த்திகளை விரக மூர்த்தியென வைகாநச ஆகமநூல்கள் 'அழைக்கின்றன. விரகம் என்றல் பற்றற்றவன் எனப் பொருள். திருமலையில் எழுந்தருளியுள்ள பற்றற்றான் கழலை நாம் பற்ற வேண்டுமல்லவா? விரக மூர்த்தியில் விழிநோக்கு மேல் நோக்கு, கீழ்நோக்கு, சம நோக்கு என மூன்று விதமாக அமையும். வேங்கடவன் சமநோக்கு அல்லது சௌமிய நோக்கு உடையவன். போக, யோக, வீர முதலிய தோற்றங்கள் வழங்கவல்ல அருளினையுடைய மூர்த்தமாகும். வீரகமூர்த்திகள் எப்போதும் நிராயுத பாணியாக அமையும். வேங்கடவனும் ஆயுதமில்லாது அமைந்த மூர்த்தமே. ஆயுதங்கள் பின் சேர்க்கப்பட்டன என்பது இந்த மூர்த்தத்தினை அபிஷேகத்தின்போது தரிசனம் செய்வோர்கள் நன்கு காணுவர்.

வேங்கடவன் படிமம் முருகன்தான் எனவும், பாலை (பெண்) எனவும், சிவனின் அம்சம் எனவும் சர்ச்சை எழுப்புவோர்கள் அபிஷேகத்தின்போது உருவத்திருமேனியினைக் கண்டால் ஐயம் தெளியும். இந்த வாதங்கள் பற்றிச் சற்றுப் பார்ப்போம்.

மலைப்பகுதியில் ஆலயம் அமைந்ததால் வேங்கடவன் அல்ல, முருகன் என்று கூறுவார்கள். முருகன்மலை உச்சியில் குறிஞ்சி நிலக் கிழவனாக அமைவது உண்மையே. 15-ஆம் நூற்றுண்டில் பிரபுடதேவமகாராயன் (கி.பி.1485) காலத்தே வாழ்ந்த அருணகிரி நாதர்-திருவேங்கடத்துறை முருகனைப் பற்றி நான்கு பாடல்கள் பாடியுள்ளார். குன்றுதோறும் உறையும் முருகனின் தலங்களைக் குறிப்பிடுகையில் முருகன் தலம் என வேங்கடமலையையும் சேர்த்துக் கொள்கிறுர். அவர் குறிப்பிடும் மற்ற தலங்களில் கயிலைமலை ஒன்று. கயிலைமலையில் முருகன் கோயில் இல்லை என்பது அறிந்ததே. திருமால் உறையும் இடம் காடும் காடு சார்ந்த பூமியுமாகும். வேங்கடவன் கோயில் சமவெளியில் அமைந்துள்ளதைச் சிந்திக்க வேண்டும். மேலும், வேங்கடவனுக்கு 14-ஆம் நூற்றுண்டுக் கல்வெட்டுக்களிலே 'மலைகுனிய நின்ற பிரான்' என்ற சிறப்புப் பெயர் குறிப்பதிலிருந்து வேங்கடவன்ஆலயம் (மலைகுனிந்து, சூழ்ந்துள்ள) முல்லைப் பகுதியிலிருப்பது விளங்குகிறது.

சிம்மம் விமானச் சுவர் மூலைகளில் காணப்படுவதால் அது தேவியின் படிமம் என்பர். மதில் சுவர்களில் சிம்மமும் பக்ஷி ராஜாவான கருடனும் இருக்க வேண்டும் என வைகாநச ஆகம நூல்கள் கூறுவதை நோக்குங்கால் இந்த மரபு வைணவ ஆலயங்களுக்கும் உண்டு எனத் தெரியும். வெள்ளிக்கிழமை அபிஷேகம் தோன்றியது ஒரு சில நூற்றுண்டிற்குள்ளாகத்தான் என்பதனாலும் அன்று இலக்குமிக்கு மஞ்சள் நீராட்டு விழா அளிப்பதனாலும் வேங்கடவனுக்கு தேவி ஆராதனை நடைபெறுகிறது என்பதாகக் கூறுவதற்கில்லை. படிமத்தினை அபிஷேகத்தின் போது கூர்ந்து கவனித்தால் திருமேனியில் ஸ்தனம் இல்லை என்பது விளங்கும்.

ஆயினும் கழுத்திலிருந்து இடைவரை சிற்பிகளுக்கே உரித்தான ஒரு திருத்தத்தில் சிலை வடித்தெடுத்திருக்கின்றனர். இந்த திருத்தங்களைச் சைவ, வைணவப் படிமங்களில் காண்போம். மும்மூர்த்தி

கள் ஆணுமல்ல, பெண்ணுமல்ல ஆனாலும் இரண்டும்கலந்த புருஷ- பிரக்ருதியின் கோலம் என்று காட்டுவதற்காக, சிற்பங்களில் சில திருத்தம் ஏற்படுத்தி, மனித அளவைகளுக்கு உட்படுத்தாமல் சிலைகளை அமைக்கின்றனர். இதனை நன்ருக வேங்கடவன் திருமேனியில் காணலாம். வைணவப் படிமத்திற்கே உண்டான பிரலம்ப யக்ஞோபவீதம் திருமேனியில் விளங்குகிறது. இதைப் போன்று பல வைணவச் சின்னங்கள் திருமேனியில் விளங்குவதால், வேங்கடவன் திருஉருவத்தை வைணவக் கோலமாக அமைத்துள்ளது விளங்கும்.

அர்ச்சனையில் வில்வம் பயன்படுத்துவதால் சிவனின் அம்சம் எனக் கருதுவர் சிலர். கட்டுரையின் கடைப் பகுதியில் வில்வமும் மாலூக்கு உகந்த புஷ்பபத்ரம் என விளக்கியுள்ளதைக் காண வேண்டும்.

கௌத்துகர்: வெள்ளியால் செய்யப்பட்ட மணவாளப் பெருமாள் கௌத்துக மூர்த்தியாக அமைந்துள்ளார். இது 7-ஆம் நூற்ருண்டைச் சார்ந்த பல்லவ மன்னனின் அவையினைச் சார்ந்த சாமவி என்ற மாதரசியினால் அளிக்கப்பட்டது. நித்யமும் காலையில் அபிஷேக சேவை பெறுகிறது. இரவில் கட்டிலில் சயன மூர்த்தியாகவும் அமைகிறது.

பலி மூர்த்தி கொலு ஸ்ரீநிவாசன் என்று அழைக்கப்படும் வெங்கலத் திருமேனிதான் பலிமூர்த்தியாகத் திகழ்கிறது. தினமும் காலையில் கொலு வீற்றருளி நித்திய பஞ்சாங்கம் கேட்டருளும் மூர்த்திதான் இது. அவர் முன்னிலையில் கோயில் கணக்கு வாசிக்கப்படுகிறது. அந்தணர் ஒருவருக்குத் தானமும் வழங்குகிறார் கொலு ஸ்ரீநிவாசர்.

அபிஷேக மூர்த்தி உக்கிர ஸ்ரீநிவாசர் எனவும் வேங்கடத்துறைவர் எனவும் அழைக்கப்படும் இந்த ஐம்பொன் மூர்த்திதான் ஒரு காலத்தில் விழாக்கோலம் பூண்டு பவனி வரும் பெம்மானாக விளங்கிறது. இரு தேவியருடன் எழுந்தருளியுள்ள இந்த மூர்த்தி வருடத்திற்கு ஒரு முறை பவனி வருகிருர். அந்த நாள் கார்த்திகை துவாதசியாகும். அன்று புறப்பாடு சூரியோதயத்திற்கு முன் அமையும்.

உற்சவர்: மலையப்ப சுவாமி என்றும், மலைகுனிய நின்ற பிரான் எனவும் அழைக்கப்படும் அலங்கார மூர்த்திதான் உற்சவ மூர்த்தி. இது விழாக்காலங்களிலும் நித்திய, கல்யாண, வசந்த உற்சவங்களில் பங்கு கொள்ளும் இறைப் படிமம். கி.பி. 1339-ஆம் வருடத்துக் கல்வெட்டுகளில் குறிப்பிடப் பட்டுள்ளது.

## பிற விக்கிரகங்கள்

இராமர், சீதாப் பிராட்டி, இலக்குமணன், சுக்ரீவனுடன் எழுந்தருளிய இராமபிரானின் உருவத் திருமேனி, வேங்கடவன் சந்நிதியில் இடம் பெறுகிறது. "இராமர் மேடை" எனக் குறிக்கப்படும் இடத்தில் அங்கதன், அனுமான் எழுந்தருளியிருக்கின்றனர்.

கிருஷ்ணன்: நவநீத நடன கிருஷ்ணனும் ஸ்ரீநிவாசன் சந்நிதியில் இடம் பெற்றுள்ளான். மார்கழி மாதத்தில் ஏகாந்த சேவை பெறும் மூர்த்தியாவான். கட்டிலில் இரவு இடம் பெற்று ஆண்டாளுடனும் பக்தர்கள் உள்ளத்திலும் உறைந்துள்ளவனாக விளங்குவதைப் பள்ளியறைச் சடங்கு நினைவூட்டுகிறது.

சக்கரத்தாழ்வார்: சக்கரத்தாழ்வார் உருவத் திருமேனியும் சந்நிதியில் இடம் பெறும் ஒரு மூர்த்தம்.

## மலர்த்திருப்பணி

திருமலையில் பாரம்பரியமாக வந்த திருப்பணிகள் பல. அதில் ஒன்றினை மட்டும் இங்கே சிந்திப்போம். அதுதான் வேங்கடவனுக்கு சமர்ப்பிக்கத் தினமும் ஆற்றும் மலர்த்திருப்பணி. யமுனைத் துறைவன் என்று ஒரு சந்நிதி கோயில் பிரசாதங்கள் விற்கும் இடத்தின் அருகே உள்ளது. அங்கே கால் படாமல் மலர்

தொடுக்க ஒர் அழகிய ஏற்பாடு அமைக்கப்பட்டிருக்கிறது. தினமும் மலர்களால் திருவேங்கடமுடையாருக்குத் தொடர்ந்து பூமாலை கொடுத்துச் சேவை சாதிக்க அனந்தாழ்வார் தன்னுடைய வாழ்நாளை அர்ப்பணித்தார். அனந்தாழ்வார் இராமானுஜரின் பரம சீடராவார். இன்றும் அவருடைய பெயரால் 'அனந்தாழ்வார் திருமாளிகை' என்று ஒரு மண்டபம் திருமலையில் விளங்குகிறது. அங்கு அநந்தாழ்வாருக்கு வேங்கடவன் காட்சி கொடுக்கும் ஒரு புடைப்புச் சிற்பம் உள்ளது. சிறிதளவே தொடங்கிய அநந்தாழ்வாரின் நந்தவனம், சாளுவ நரசிம்மன் காலத்தில் விரிவடைந்தது. கி.பி.. 1458-இல் திரு வேங்கடநாதர் திரு நந்தவனப் பணியினைப் பெரிய பெருமாள் பேற்பார் வையிட்டார் என்று கல்வெட்டுச் சாசனங்கள் கூறுகின்றன. இந்த நந்தவனப் பராமரிப்பு சாத்தாத வைஷ்ணவர்கள் என்று அழைக்கப்படும் தாச நம்பிகள் வசம் இருந்ததென்றும், அந்த நந்தவனத்தில் தேங்காய், மாங்காய், மாம்பழம், பலாக்காய், வாழைக்காய், வாழைப்பழம், நார்த்தங்காய், எலுமிச்சை முதலியன பெருமளவில் விளைந்ததெனவும் கல்வெட்டுகள் கூறுகின்றன.

எட்டு புஷ்பங்கள் பெருமாளுக்கு உகந்தனவாக வாமன புராணம் கூறுகிறது: அவை நந்தியாவர்த்தம், பத்மம், துளசி, விஷ்ணு பர்ணிகம், வில்வம், கரவீரம், அல்லி, குமுதம் என்ற புஷ்பங்கள. பிருகுமுனிவர் எழுதிய 'கிரியாதிகாரம்' என்ற நூலில் காலை, மதியம், சாயங்காலம், எப்போதும் சூட்டவேண்டிய புஷ்பங்கள் குறிக்கப்பட்டுள்ளன. காலையில்சூட்ட வேண்டிய புஷ்பங்கள்: பங்கஜம், பலாசம், துளசி, புது மல்லிகை, நந்தியாவர்த்தம், மந்தாரம், மாதவி, சண்பகம், புன்னாகம், கேதகி போன்ற புஷ்பங்கள்.

மதியத்திற்கு உகந்த புஷ்பங்களாவன: வெண்தாமரை, கரவீரம், பலாசம், துளசி, உத்பலம், வில்வம், செந்தாமரை, கோலிதம், பத்திரம், தாபசம் போன்றவை.

சாயங்காலம் அர்ச்சனைக்குச் சூட்டுதலுக்குரிய புஷ்பங்களாவன: செந்தாமரை, குமுதம், மல்லிகை, ஜாதி புஷ்பம், மாதவி, கரவீரம், கஜகர்ணிகம், தமனம் முதலியவை.

எக்காலத்திற்கும் சூட்டப் பயன்படும் புஷ்பங்களாவன: தூர்வா, துளசி, வில்வம், கரவீரம், சம்பகம், விஷ்ணு கிராந்தம் முதலியன. பொதுவாக நல்ல வண்ணமும் சுகந்தமும் பாலுமுள்ள புஷ்பங்களே விஷ்ணுவிற்கு உகந்தவை என வாமன புராணம் கூறுகிறது.

இக்காலத்தில் நிறைய ரோஜா மலர்களால் வேங்கடவன் அலங்கரிக்கப்படுகின்றான். புராணங்களில் கூறப்படும் அத்தனை புஷ்பங்களும் திருமலையில் பயிர் செய்யப்படலாம். ஆயினும், இறைவன் ரோஜா மலரையே ஏற்றுக்கொள்கிறான். அவனுக்குத் தெரியாதது உண்டா?

## காவிரிக்கரையில் அமைந்த தொன்மை வாய்ந்த வைணவ அரங்கங்கள்

1) ஸ்ரீரங்கப்பட்டினம் - (மைசூர்)

2) திருவரங்கம் (ஸ்ரீரங்கம்) - திருச்சி மாவட்டம்

3) அப்பாலரங்கம் (அ) வடரங்கம் - சீர்காழி தாலுகாவில் கொள்ளிடக்கரையில் உள்ளது.

4) கும்பகோணம் - மத்யரங்கம் (அ) கும்பகோணம் சாரங்கம்.

5) திருஇந்தளூர் - பரிமளரங்கம் (மாயூரம் தாலுகா)

மு. திரவியம் அவர்களின் 'இந்து சமயக் களஞ்சியம்' புத்தகத்திலிருந்து
திரு. சி. வெங்கடேசன் - ஒசூர்.

(தொடர் கட்டுரை)

# ஸஹஸ்ர நாமம்

திரு. T.S. இராஜகோபாலன் - சென்னை.

## நம்மாழ்வார் விளக்கம்

**ஸ்வாபந: ஸ்வவசோ வ்யாபீ**
**நைகாத்மா நைககர்ம க்ருத் ।**
**வத்ஸரோ வத்ஸலோ வத்ஸீ**
**ரத்நகர்ப்போ தநேச்வர: ।। 50 ।।**

466. **ஸ்வாபந :** - தன்னுடைய அழகாலும் முறுவலாலும் கண்ணோக்காலும் அன்பரை மயக்கித் தம்மை மறக்கும்படி செய்பவன் - தூங்குவோர் போல் செய்பவன்.

நீர்மையால் நெஞ்சம் வஞ்சித்துப் புகுந்து, என்னை
ஈர்மை செய்து என் உயிராய் என் உயிர உண்டான் (9-6-3)

467. **ஸ்வவச :** - இவர்கள் இவ்வாறு மெய்ம்மறந்திருக்கும்போது, அடியார்களான தேவர்களுடன் தன் விருப்பப்படி மகிழ்ந்திருப்பவன்.

குழுமித்தேவர் குழாங்கள் கைதொழச், சோதி
வெள்ளத்திலுள்ளே எழுவது ஓர் உரு (5-5-10)

468. **வ்யாபீ :** - கடல் கடையும்போது, தேவர்கள், அசுரர்கள் இவர்களது சக்தியை வளர்ப்பதற்காக இவர்களிடம் வியாபித்திருந்தவன்.

469. **நைகாத்மா :** - இவ்வாறு கடையும்போது பல வடிவங்கள் கொண்டவன்.

470. **நைககர்மக்ருத் :** - மலையைத் தாங்குதல், வாசுகியைப் பற்றி இழுத்தல் இவை போன்ற பல செய்தவன்.

மலைகொண்டு மத்தா, அரவால் சுழற்றிய
மாயப் பிரான் (தி.விரு.51)

## 18.2 தர்ம ஸ்வரூபன்

471. **வத்ஸர :** - புருஷார்த்தத்தை வெளியிடுவதற்காக எல்லாரிடத்திலும் அந்தர்யாமியாக இருப்பவன்.

**சேண்பால வீடோ, உயிரோ, மற்றெப்பொருட்கும்**
**எண்பாலும் சோரான்பரந்துளனாம் எங்குமே**
(2-8-8)

[சேண்பாலவீடு - பரமபதம். எண்பாலும் சோரான் - எண்ணப்படும் இடங்களையும் விடமாட்டான்.]

472. **வத்ஸல :** - தன் பக்தரிடம் பேரன்பு கொள்பவன்.

ஒருயிரேயோ? உலகங்கட்கெல்லாம் (8-1-5)

473. **வத்ஸீ :** - கன்றை நினைக்கும் தாய்ப்பசுவைப் போல், அடியாரிடம் பிரேமை நிறைந்தவன்.

அற்புதன் நாராயணன், அரி, வாமனன்
நிற்பது மேவி இருப்பது என் நெஞ்சகம் (8-6-10)

474. **ரத்நகர்ப்ப :** - அடியார்க்கு வழங்க வேண்டிய தனம் மிகுதியாகத் தன்னிடம் கொள்பவன்.

இரும்பொருட்கெல்லாம் அரும்பெறல் தனிவித்து
(திருவா. 3)

475. **தநேச்வர :** - அவரவர்கள் விரும்பும் ஐச்வர்யங்களை உடனே அளிப்பவன்.

சேரும் கொடைபுகழ் எல்லை இலானை
(3-9-7)

**தர்மகுப் தர்மக்ருத் தர்மீ**
**ஸதக்ஷர மஸத்க்ஷரம் ।**
**அவிஜ்ஞாதா ஸஹஸ்ராம்சுர்**
**விதாதா க்ருதலக்ஷண: ।। 51 ।।**

476. **தர்மகுப் :** - இவ்வாறு வழங்கும் தனம் நல்ல வழியில் பயன்படுமாறு அருள் செய்து, தர்மத்தைக் காப்பவன்.

**தரும அரும்பொருளாய, திருமகளார் தனிக்**
**கேள்வன் (1-6-9)**

[தரும அரும்பொருளாய - தர்மத்தின் அரிய பயனாகிய]

477. **தர்மக்ருத் :** - இவ்வாறு தர்மத்தை வளர்ப்பதாலே தர்மம் செய்பவன்.

478. தர்மீ : - யாவரையும் காப்பதற்கு தரமமே பொதுவான கருவியாகக் கொள்ப வன.

479. ஸத் : - இயல்பாகவே நல்லியல்பு டையோன்.

ஒளிவரு(ம்) முழுநலம் (1-3-2)

480. (ஸத்) அக்ஷரம் : - குறைவு, மாறுபாடு, அழிவு இவை இல்லாதவன்.

அருகல் இலாய பெரும் சீர் (2-5-10)

[அருகல்-குறைதல்.]

481. அஸத் : - நற்செயல் செய்யாதவர் களால் காணமாட்டான்.

காணலுமாகான், ஊனல்லன், இல்லையல்லன் (2-5-10)

482. அஸத் க்ஷரம் : - இவர்கள் விஷ யத்தில் அஸத்யமாகவும் க்ஷரமாகவும் இருப் பவன்.

பொய்யன் ஆகும் புறமே தொழுவார்க்கெல்லாம் (9-10-7)

[தன்னை விரும்பாமல் நாடிய துர்யோ தனனுக்குச் சேனையை மாத்திரம் உதவி, அகன்றிருந்தான்.]

483. அவிஜ்ஞாதா : - அன்பரது குற் றங்களை ஆராயாதவன்.

ஆசறு சீலனை (5-3-1)

[ஆசு அறு-அன்பரோடு பழகும்போது, அவர்களது இழிவைக் கருதாதவன்.]

484. ஸஹஸ்ராம்சு : - அபரிமிதமான ஞானமுடையவன்.

நெறி எல்லாம் எடுத்துரைத்த நிறைஞானத்
தொரு மூர்த்தி (4-8-6)

485. விதாதா : - இவர்களது குற் றங்களைப் பொறுக்கும் போது, யமனால் வேதனை சாராதவாறு தானே விதிப்பவன்.

நமன்தமர் பாசம் விட்டால், அலைப்பூண்
எல்லாம் அகல (3-2-10)

[அலைப்பூண் - அலைக்கப்படுதல்]

486. க்ருத லக்ஷண : - இவர்கள் அறிந்து கொள்வதற்காக, நூல்களையும் வரம் புகளையும் வெளியிட்டவன் - ராமாயணம், மஹாபாரதம் போல்வன.

வேத(ம்) முன் விரித்தான் (2-10-10)

## 18.3 காப்பாற்றும் விதம்

கபஸ்திநேமி: ஸத்வஸ்த:
ஸிம்ஹோ பூதமஹே ச்வர: ।
ஆதிதேவோ மஹாதேவோ
தேவேசோ தேவப்ருத் குரு: ।। 52 ।।

487. கபஸ்திநேமி : - இவர்களைக் காப்பதற்காக, சுடர்கள் அடர்ந்து ஆயிரம் முனைகள் உடைய சக்கராயுதத்தை ஏந்து வோன்.

சுடர், வட்டவாய் நுதி நேமியீர்! (2-4-9)

488. ஸத்வஸ்த : - ஸத்வ குணத்தில் ஊன்றியிருப்பவன்.

489. ஸிம்ஹ : - அன்பர்களது பகை வர்களுக்கு ஸிம்ஹம் போல் இருப்பவன்.

...அவர் படக், கனன்று முன்நின்ற காய்சின
வேந்தே! (9-2-6)

[அவர்-மாசின மாலி மாலிமான் என்ற பகைவர்.]

490. பூதமஹேச்வர : - எல்லா உயிர்க ளுக்கும் தலைவரான பிரமன் போல்வார்க்கு முதல்வன்.

மூவர் முதல்வன், ஒரு மூவுலகாளி (9-8-9)

491. ஆதிதேவ : - எல்லாத் தேவர்க ளுக்கும் ஆதியாக விளங்குவோன்.

உம்பர் யாதவரும் படைத்த முதல்வன்
அவன் நீ (10-10-2)

[உம்பர்-தேவர், யாதவர்-மனிதர், விலங்கு கள், தாவரங்கள் யாவும் நீ படைத்தாய்.]

492. மஹாதேவ : - பந்து கொண்டு விளையாடுவதுபோல், இந்த தேவர்களோடு (இவர்களை வைத்துக்கொண்டு) விளையாடு வோன்.

இன்புறும் இவ்விளையாட்டுடையான் (3-10-7)

493. தேவேச : - தேவர்களுக்கு நாதன்,

மனிசர்க்குத் தேவர்போலத் தேவர்க்கும்
தேவாவோ (8-1-5)

494. தேவப்ருத் : - இவர்களுக்கு நிர் வாஹகன்.

வெங்கதிர் வச்சிரக்கை இந்திரன் முதலாத்
தெய்வம் நீ (7-6-4)

495. குரு : - அவர்களது செயல்களை வேதத்தைக் கொண்டு அறிவித்த ஆசாரியன்.

வேத(ம்) முன் விரித்தான் விரும்பிய கோயில் (2-10-10)

உத்தரோ கோபதிர் கோப்தா
ஜ்ஞாநகம்ய: புராதந: ।
சரீரபூதப்ருத் போக்தா
கபீந்த்ரோ பூரிதக்ஷிண: ॥ 53 ॥

496. உத்தர : - அசுரர்களிடமிருந்து துன்பம் நேரும் போது, தேவர்களைக் காப்பாற்றியவன்.

தேவாசுரம் செற்றவனே! திருமாலே! (9-8-7)

[தேவாசுரம்-தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நடந்த போரில் அசுரர்களை அழித்தவன்.]

497. கோபதி : - கலைகள் யாவற்றையும் காப்பாற்றுவோன்.

பண்புடைய வேதம் பயந்த பரனுக்கு (6-6-5)

498. கோப்தா : - கலைகள் எல்லாவற்றையும் காப்பாற்றுபவன்

ஞானக்கலைகளுக்கெல்லாம் ஆவியும்
ஆக்கமும் தானே (1-9-7)

499. ஜ்ஞாநகம்ய : - ஸமாதி நிஷ்டை என்னும் பரவித்யையாகிய ஞானத்தாலே அறியத்தக்கவன்.

வேத விளக்கினை என் தக்க ஞானக் கண்களாலே
கண்டு தழுவுவனே (4-7-11)

500. புராதந : - முந்திய கல்பங்களிலும் இவ்வாறே கலைகளை வெளிப்படுத்தியவன்.

கலைப்பல் ஞானத்து என் கண்ணனை (3-2-10)

501. சரீர பூதப்ருத் : - தனக்குச் சரீரமான பூதங்கள் யாவற்றையும் தாங்குமவன்.

எல்லா உலகும் உயிரும் தானேயாய (10-7-2)

502. போக்தா : - ஹய சிரஸ் ரூபமான ஹவ்ய கவ்யங்கள் யாவையும் உண்பவன்.

[ஹவ்யம் - தேவர்களுக்கு அளிப்பது; கவ்யம் - பிதிர்களுக்கு அளிப்பது.]

503. கபீந்த்ர : - (ராமாவதாரத்தில்) வானர வடிவில் பிறந்த தேவர்களுக்குத் தலைவன்.

504. பூரிதக்ஷிண : - (அவதாரங்களில்) அசவமேதம் முதலான யாகங்கள் செய்து விசேஷமாக தக்ஷிணை வழங்கியவன்.

ஸோமபோம்ருதப: ஸோம:
புருஜித் புருஸத்தம: ।
விநயோ ஜய: ஸத்யஸந்தோ
தாசார்ஹ: ஸாத்வதாம் பதி: ॥ 54 ॥

505. ஸோமப: இந்த யாகங்களில் ஸோமரஸ பானம் செய்தவன்.

506. அம்ருதப: தன அடியார்களுக்கு இன்பம் தந்து, இதனால் தான அமுதம் பருகியது போல களிப்பவன்.

என்னை முற்றும் தானேயாய் நின்ற
அம்மான் (10-7-3)

தென்னா எனனும் என் அம்மான் (10-7-3)

[களிப்பால கவிபாடுகிறான, பாடிக் களிக்கிறான்.]

507. ஸோம: தனக்கும், தன்னை அனுபவிப்பவர்களுக்கும் அமுதமாக இருப்பவன்.

கடலினுள் அமுதமே! அமுதில் பிறந்த
சுவையே! சுவையது பயனே! (8-1-7)

508. புருஜித்: அவதாரங்களில் பலரை வென்றவன்.

வன்மையுடைய அரக்கர் அசுரரைமாளப்படை
பொருத, நன்மையுடையவன் (3-10-1)

509. புருஸத்தம: தனது கல்யாண குணங்களை அனுபவிக்க விரும்புவோர் பலரிடத்தில் (ஹனுமான் போல்வாரிடம்) நிலையாக இருப்பவன.

தாலும் யானுமெல்லாம் தன்னுள்ளே கலந்
தொழிந்தோம், தேனும் பாலும் நெய்யும் கன்
னலும் அமுது மொத்தே (2-3-1)

510. விநய: மாரீசன் முதலான தீயோரைத் தனது பராக்ரமத்தால் தணடித்து அடக்கியவன்.

திண்கழல்கால் அசுரர்க்குத் தீங்கு
இழைக்கும் திருமாலை (3-5-2)

511. ஜய: - அன்பரால் வெல்லப்பட்டு, அவர்களுக்கு விதேயனாக இருப்பவன்.

*பாம்பணை நம் பரனை...வைத்தேன் மதி*
*யால் எனது உள்ளத்தகத்தே* (8-7-10)
*"மங்கவொட்டு உன் மா மாயை"...*

*என்று ஆழ்வார் இறைஞ்சியவாறு செய்தான்* (10-7-10)

512. *ஸத்ய ஸந்த:* அன்பர்களுக்கு அருள் செய்யும்போது சொன்ன சொல் தவறாதவன்.

*...வைதிகன் பிள்ளைகளை-உடலொடும்*
*கொண்டு கொடுத்தவனைப்பற்றி* (3-10-5)

513. *தாசார்ஹ:* பக்தர்கள் தன்னை தனமாக ஏற்கத்தக்கவன். பக்தர்களுக்குத் தன் ஸ்வரூபத்தையே தரத்தக்கவன். தாசார்ஹர்கள் என்ற யாதவர் வம்சத்தில் பிறந்தவன்.

**கலந்து என் ஆவி, நலம்கொள் நாதன்** (1-7-6)

514. *ஸாத்வதாம் பதி:* தன்னையே விரும்பும் சான்றோர்க்கு (ஸத்வ குணத்தால் உயர்ந்தோர்க்கு) நாயகன். ஸாத்வத வம்சமான யாதவ குலத்தில் அவதரித்து அதற்குத் தலைவனாய்த் திகழ்ந்தவன்.

**பெருமக்கள் உள்ளவர்தம் பெருமானை** (3-2-5)

[பெருமக்கள் உள்ளவர்-தன்னோடொத்த நித்யசூரிகள்.]

**ஜீவோ விநயிதாஸாக்ஷீ**
**முகுந்தோ ऽமிதவிக்ரம: ।**
**அம்போநிதி ரநந்தாத்மா**
**மஹோததிசயோ ऽந்தக: ।। 55 ।।**

515. *ஜீவ:* தன்னை விரும்புவோர்க்கு, ஆத்ம நாசம் விளையாமல் காத்து, கைங்கர்யங்களைத் தந்து, உயிர்போல் திகழ்வோன்.

**அறிவார் உயிரானாய்** (6-9-8)

[அறிவார்க்கு உயிரானவே! அறிவாரை உயிராகக் கொண்டவனே.]

516. *விநயிதா:* அரச குமாரர்களைப் பாராட்டுவதுபோல் இவர்களைப் பாராட்டுபவன்.

**உகந்தே உன்னை உள்ளும் என் உள்ளத்து,**
**அகம்பால், அகந்தான் அமர்ந்தே இடங்கொண்ட**
**அமலா!** (9-4-7)

[உள்ளும்-நினைக்கின்ற. அகம்பால் அகம் தான - உள்ளுக்குள்ளே, மனத்துள் அமர்ந்து - உறைந்து.]

517. *ஸாக்ஷீ:* இவர்களுக்கு அருள் செய்வதற்கு இவர்களது செயல்களைக் கணிசிப்பவன்.

*மயர்வற என் மனத்தே மன்னினான்றன்னை*
(1-7-6)

518. *முகுந்த:* (இவர்கள் இறைஞ்சும் போது) முக்தி அளிப்பவன்.

**விண்ணுலகம் தருவானாய் விரைகின்றான்**
(10-6-3)

519. *அமித விக்ரம:* இவர்கள் தன்னை வணங்கும்போது, குணங்களுக்கெல்லாம் ஆதார சக்தியாக விளங்குவோன்.

**...உன் உலப்பில் கீர்த்தி வெள்ளத்தின்**
**கரைக்கண் என்று செல்வன்நான் - காதல்**
**மையல் ஏறினேன்** (4-3-9)

[உலப்புஇல்-அழியாத, கீர்த்தி வெள்ளத்தின்-கொள்ளும் பிரேமத்தாலே பெற்ற கீர்த்தியாகிய பெருங்கடலின். கரைக்கண்-கரையிலே, காதல் மையல் ஏறினேன் - காதலால் மயங்கினேன்.]

520. *அம்போநிதி:* உலகங்கள் யாவையும் தாங்கும் பீடம்போல் விளங்கும் கூர்ம ரூபியாகப் பாதாளக் கடலில் உறைபவன். ஆழ்கடலில் ஆதிகூர்மமாக எழுந்தருளியிருப்பவன்.

521. *அநந்தாத்மா:* இந்த மூர்த்திக்கு மேல், உலகங்களுக்கு ஆதாரமான ஆதிசேஷனுக்கு ஆத்மாக இருப்பவன்.

522. *மஹோததிசய:* ப்ரளய காலத்தில் பெருங்கடலில் ஆதிசேஷனின் மேல் பள்ளி கொள்பவன்.

*பாற்கடல் பாம்பணைமேல் பள்ளிகொண்டருளும்*
*சீதனையே* (தி.விரு. 79)

523. *அந்தக:* அப்போது யாவற்றையும் அழிப்பவன்.

**அஜோ மஹார்ஹ: ஸ்வாபாவ்யோ**
**ஜிதாமித்ர: ப்ரமோத ந: ।**

ஆநந்தோ நந்த நோ நந்த:
ஸத்யதர்மா த்ரிவிக்ரம: ॥ 56 ॥

524. அஜ: இருபத்தாறாவது தத்வமாகக் கருதப்பெறுவோனும், அகாரத்தின் பொருளான நாராயண ரூபியுமானவன். யாவரும் இவனிடம் அடங்குவதாலே, இவற்றைக் குறிக்கும் சப்தங்களுக்குக் காரணமானவன்.

யாவரும் எவருந் தானாய (3-4-10)

525. மஹார்ஹ: ப்ரணவத்தை ஓதி ஆத்மாவைத் தன்னிடம் ஒப்புவிப்பதாகிய ஆராதனைக்குரியவன்.

உம்முயிர், வீடுடையானிடை,
வீடுசெய்மினே (1-2-1)

[உம் உயிர், வீடு உடையானிடை-உம்முடைய ஆத்மாவையும் சரீரத்தையும் உடைய பெருமானிடம், வீடு செய்து - ஸமர்ப்பித்து]

526. ஸ்வாபாவ்ய: இயற்கையாகவே ஆத்மாவுக்கு ஸ்வாமியாக இலங்குவோன்.

முழு ஏழுலகுக்கும் நாதன், வேதமயன்
(2-7-2)

527. ஜித-அமித்ர: இந்த அருமையை அறிய வொட்டாமல் தடுக்கும் அஹங்காரம், மமகாரம், காமம், க்ரோதம் போல்வனவற்றை வெல்பவன்.

வழிநின்ற வல்வினை மாள்வித்து
அழிவு இன்றி ஆக்கம் தருமே (1-6-6)

528. ப்ரமோதந: தன்னைச் சிந்தனை செய்வோரை மகிழ்விப்பவன்; இவர்களது மகிழ்ச்சியால் தானும் மகிழ்பவன்.

ஆராவமுதமாய் அல்லாவியுள் கலந்த
(2-5-5)

[அல் ஆவியுள் கலந்த - பொருளல்லாத என்னோடு கலந்த]

கன்னல், பால், அமுதாகிவந்து, என் நெஞ்சம்
கழியானே (5-5-9)

## 19. கபில மூர்த்தி

529. ஆநந்த: (தைத்திரீய உபநிஷத்தில் விவரித்துள்ளவாறு) வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாத பேரின்பமயமானவன்.

மாமணிமண்டபத்து, அந்தமில் பேரின்பத்து
அடியரோடு இருந்தமை (10-9-11)

[மாமணி மண்டபம்-ஸ்ரீவைகுண்டத்தில் பகவான் எழுந்தருளியுள்ள ஸ்தலம்.]

530. நந்தந: முக்தி தசையில் பக்தர்களது ஆனந்தத்திற்குக் காரணமானவன்.

வானுயர் இன்பம் மன்னி வீற்றிருந்தாய்
(8-1-9)

531. நந்த: இவ்வாறு அனுபவிக்கும் பக்தர்களாலும் போகங்களாலும் பெருமையுடையவன்.

ஞாலப்பிரான், விசும்புக்கும் பிரான், மற்றும்
நல்லோர் பிரான் - கோலங்கரிய பிரான்,
எம்பிரான் (தி.விரு. 40)

532. ஸத்ய தர்மா: இவர்களை எப்போதும் காப்பதாகிய தர்மம நிலையாக உடையவன்.

மறப்பு அற, என்னுள்ளே மன்னினான்றன்னை
(1-10-10)

[மறப்பு அற - நான மறவாதவாறு என்னைக் காப்பதற்காக.]

533. த்ரிவிக்ரம: இவ்வாறான மகிமையால் மூன்று வேதங்களிலும் வியாபித்தவன், த்ரி என்ற வேதத்தில் உறைபவன்.

(தொடரும்)

### பொன்மொழி

எல்லாக் காரியங்களையும் இறைவனே செய்கிறான் என்பது உண்மையே. ஆனால் அதை உணர்பவர் வெகுச்சிலரே. கர்வத்தினால் வெறி கொண்டே மக்கள் இறைவனது துணையின்றித் தாங்களே எல்லாவற்றையும் செய்வதாகக் கருதுகிறார்கள். அவனை நம்பியிருப்பதில்லை. ஆனால் தன்னை நம்பி இருப்பவரை எல்லாத் துன்பங்களிலும் இறைவன் காப்பாற்றுகிறான்.

--அன்னை சாரதா தேவி

தொகுத்தவர்: சு. பொன்னம்மாள் - முகலூர்.



# ப்ரதிவாதி பயங்கரம் அண்ணாவும் திருவேங்கடத்து அண்ணலும்



டாக்டர் மா. வரதராஜன் - திருப்பதி.

மணவாளமாமுனிகளின் சீடர்கள் எண்மரில் ஒருவர் ப்ரதிவாதி பயங்கரம் அண்ணா என்னும் ஆசார்யாராவர். இவ்வாசார்யர் ஒரு சமயம் மாமுனிகளுடன் திருமலைக்கு எழுந்தருளியிருந்தபோது அவரதம் நியமனத்தால் 'காரெழில் அண்ணல்' என்றும், 'அண்ணல் மாயன்' என்றும், 'அண்ணலே' என்றும் பலபடியாக நம்மாழ்வாரால் போற்றப்பெற்ற திருவேங்கடவன் விஷயமாக ஸுப்ரபாதம், ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களாசாஸனம் என்னும் நான்கு ப்ரபந்தங்களை அருளிச்செய்துள்ளார். இந்நான்கு ஸ்தோத்ரங்களும் திருமலையில் அந்நாள் தொடங்கி இந்நாள்வரை தினமும் அதிகாலையில் அநுஸந்திக்கப்பட்டு வருவது அனைவரும் அறிந்ததே.

இந்நான்கு துதிநூல்களில் ஸ்ரீவேங்கடேச ப்ரபத்தி மூலமாக திருவேங்கடத்து அண்ணலிடம் சரணாகதி செய்கிறார் ஸ்வாமி அண்ணா. பதினாறு ச்லோகங்கள் அடங்கிய இந்நூலில் 'ஈசாநாம்' என்ற முதல் ச்லோகத்தால் 'அகலகில்லேன் இறையுமென்று அலர்மேல் மங்கையுறைமார்பா' என்று நம்மாழ்வார் அருளிய படியே திருவேங்கடவன் திருமார்பில் நித்யவாசம் செய்யும் திருமகளைப் புருஷகாரமாகப் பற்றுகிறார். அதாவது இந்த உலகுக்குத் தலைவியானவள் திருமகள்; வேங்கடத்து அண்ணலான திருமாலுக்கு உயர்ந்த மனைவி; அத்திருமாலின் திருமார்பில் எப்போதும் தங்கியிருக்க ஆசையுடையவள்; அவனது பெருமையை வளரச்செய்பவள்; தாமரைப்பூவை இரண்டு கைகளில் ஏந்தியிருப்பவள்; தாமரை மலராகிய பீடத்தில் வீற்றிருப்பவள்; தாயன்பு முதலிய குணங்களால் சிறந்து விளங்குபவள்; இத்தகைய தன்மைகளைத் தன்னகத்தே கொண்டு உலகுக்குத் தாயாகத் திகழும் லக்ஷ்மி தேவியை வணங்குகிறார் என்றவாறு.

அப்பிராட்டியையே புருஷகாரமாகக் கொண்டு - உலகைப் படைத்தவனும், கருணைக்கடலும், அனைத்தும் அறிந்தவனும், வல்லமையுடையவனும், தன்னை வணங்குபவரிடம் குற்றேவல் கொள்பவனும், தன் உயர்த்தி பாராமல் தாழ்ந்தாரோடும் கலப்பவனும், தன்னைப் பற்றினார்க்கு அனைத்தும் கொடுக்கும் பாரிஜாதமான திருவேங்கடவனின் திருவடிகளை அடுத்த ச்லோகம் மூலமாகச் சரணாகதி செய்கிறார்.

இவ்வாறு சரணமாகப் பற்றிய திருவேங்கடவன் திருவடிகளை மேலுள்ள ச்லோகங்களால் மிகவும் அற்புதமாக வருணிக்கிறார் ஸ்வாமி அண்ணா. அவற்றை திருப்பதி ஸ்ரீஉ.வே.தி.அ. க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமி அவர்களின் உரையைத் தழுவி அநுபவிப்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

திருவேங்கடவனின் திவ்ய குணங்களை அநுபவித்த ஸ்வாமி அண்ணா, அவனது திருவடிகளைப் பற்றிச் சொல்லும் போது அவை மங்களகரமாயும் ஒன்றோடொன்று பொருந்திச் சேர்த்தி அழகு உடையவை என்றும் கூறுகிறார். கண் கொட்டாமல் சேவித்துக்கொண்டிருந்தாலும் தெவிட்டாமல் சேவிக்கத்தக்கவைகளாம். மேலும் அத்திருவடியில் சிலம்புகளும் தெரியாதபடி மறைத்து சமர்ப்பித்த மலர்கள் நல்ல ஜாதிபுஷ்பங்களானவையாகவும் நறுமணம் கமழ்பவையாகவும் இருக்கின்றனவாம். தாமரையானது எவ்வளவுதான் சிவந்தும், நன்றாக மலர்ந்தும், பறிக்காமல் குளத்திலே இருப்பதனால் உண்டான நறுமணம் வீசும்படி இருந்தாலும், அவை இயற்கையாகச் சிவந்து மணம் கமழும் திருவடிகளுக்கு ஒப்பாக மாட்டாதவையாம்.

மற்றும் ரேகை வடிவமான கொடி, அமிர்தகலசம், குடை, வஜ்ராயுதம், அங்குசம், தாமரை மலர், கற்பக மரம், சங்கு, சக்கரம் என்கிற மங்களகரமான பரம்பொருளுக்கு உரிய அடையாளங்களினால் அழகு செய்யப்பட்டிருக்கிறதாம் அவனது உள்ளங்கால்கள். அத்தகைய திருவடிகளைத் தஞ்சமாகப் பற்றுகிறார் அண்ணாஸ்வாமி.

அவனது உள்ளங்காலானது கெம்பு ரத்தனங்களையும் விஞ்சும்படியான சிவப்பு ஒளியுடன் கூடியிருக்கி

றதாம். புறக்கால்களோ இந்த்ர நீல ரத்னங்களைக் காட்டிலும் கறுத்த காந்தியையுடையதாயிருக்கிறதாம். அவனது திருவடி விரல்களில் உள்ள திருநகங்களின் வரிசையானது தனது காந்தியினால் சந்திரனது ஒளியையும் வென்று விளங்குகிறதாம்.

அழகாகவும் வாக்குக்கும் மனதுக்கும் எட்டாத சுகுமாரமான திருவடிகளை, திருமகளானவள் ஆசையோடும் அச்சத்தோடும் தளிர்போன்ற தம் திருக்கைகளால் வருடநினைத்து தொட்டபோது அவை உடனே வாட்டத்தை அடையுமாம். அத்தகைய திருவடிகளை அண்ணஸ்வாமி சரணம் புகுவதாக அனுபவிப்பர்.

மேலும் இப்படி இயற்கையாகச் சிவந்திருக்கும் திருவடிகளை திருமகளும் நிலமகளும் நீளா தேவியும் தங்கள் கரங்களால் வருடும்போது அவர்கள் கைகளின் சிவப்புநிறம் தொற்றிக் கொண்டதோ என்று ஈடுபடுவர் 'லக்ஷ்மீ மஹீத' என்ற ச்லோகத்தினால்.

பிரமன், சிவன் முதலான தேவர்கள் எப்போதும் திருவேங்கடவனைத் துதிக்கின்றனர். அவர்கள் தலையில் அணிந்த கிரீடத்தின் நுனிகளில் அழுந்தப்பெற்ற மணிகளின் ஒளிப்பிழம்பு திருவடிகளுக்கு கற்பூரஹாரதியாகத் திகழ்கிறதாம்.

'விஷ்ணோ: பதே பரம இதி உதித ப்ரசம்ஸௌ யோ மத்வ உத்ஸ இதி' என்கிறபடியே விஷ்ணுவின் திருவடிகள் மிக உயர்ந்தவை என்றும், தேனைப் பெருக்குவதால் அவை அனைவராலும் அநுபவிக்கத்தக்கவை என்றும் வேதம் புகழ்ந்து கூறுகின்றது. அத்தகைய திருவடிகளை அவ்வெம்பெருமானே தன் வலத்திருக்கையால் தன்னைத் தஞ்சமாகப்பற்றுவதற்கு ஏற்ப 'அவை அவை' என்று சுட்டிக்காட்டுகிறனாம்.

கண்ணனாய் அவதரித்து அருச்சுனனுக்கு 'மாமேகம் சரணம் வ்ரஜ' என்கிறபடியே தன்னையே (திருவடிகளையே) சரணமாகப் பற்று என்று காட்டிக்கொடுத்தான். அத்திருவடிகளையே தானும் பற்றிப் பேற்றைப் பெற விழைவதாக ஸ்வாமி அண்ணா கூறுகிறார்.

மேலும் அவனது திருவடிகள் 'மந்மூர்த்நி' என்கிறபடியே மிகவும் தாழ்ந்தவனான தன் தலையில் வைக்கப்பட்டதாம். அவையே முன்பு க்ருஷ்ணாவதாரத்தில் கொடிய நாகத்தின் தலையிலும், ராமாவதாரத்தில் கொடிய காடுகளிலும் வைக்கப்பட்டன. அத்திருவடிகளே வேதங்களின் சிகரமாகிய உபநிஷத்துக்களிலும் எம்பெருமானையே எப்போதும் நினைக்கும் ஆழ்வார்கள திருவுள்ளங்களிலும் ஒருபடிப்பட்டு இருப்பதாக அநுபவிப்பர் அண்ணா ஸ்வாமி.

திருவேங்கடவன் திருவடிகளில் பக்தர்கள் மலர்களைக் கொண்டு அர்ச்சனை செய்கின்றனர். அம்மலர்கள் அங்கு இடம் போதாமையால் பக்கத்தில் இறைந்து இருந்தபோதும் வாடாமல் இருக்கின்றனவாம். அம்மலர்கள் சேவிப்பவர்களது மனத்தையும் கண்களையும் கவர்ந்து களிக்கும்படி செய்து ' இவையென்ன திருவேங்கடமலையின் சிகரத்துக்கு அணியப்பட்ட ஆபரணமோ' என்னலாம்படி இருக்கிறதாம்.

'சேஷிபக்கல சேஷபூதன் இழியுமதுறை பரனை முலையிலே வாய் வைக்குமாபோதே' என்பது பிள்ளைலோகாசார்யர் ஸ்ரீஸூக்தி. அதாவது தாயினுடைய அவயவமெல்லாம் கிடக்கப் பால் உணணும குழந்தை தனக்கு வகுத்ததாயுள்ள முலையில வாய வைக்குமாபோலே சேஷபூதரான ஸ்வாமி அண்ணாவும வேறு ஒபபிலலாது தமக்குள ஒப்புமையுடைய சேஷியான திருவேங்கடவன் திருவடிகளைச சரணமாகப் பறறுகிறார், 'ப்ராய பரபந்ந ஜநதா' என்ற சலோகததினால்.

ஸத்வ குணத்தினால் நிறைந்த பெரியோர்களால் எப்போதும் வணங்கத்தக்க திருவடித்தாமரைகளையுடையவர் மணவாளமாமுனிகள்; பிறவியைத் தாண்டச் செய்கிற தயையினால் நினைந்த கடைக்கண்களையுடையவருமாவர். அவ்வாசார்யர் 'இவை மிக உயர்ந்தவை, சரணம் புகுந்தார்களை மோக்ஷமடைவிக்கவல்லவை' என்று தமக்குக்காட்டிக்கொடுத்த திருவேங்கடவன் திருவடிகளைத் தஞ்சமாகப் பற்றுவதாகக் கூறுவர் ஸ்வாமி அண்ணா.

இவ்வாறு சரணாகதி செய்த இவவாசார்யர் அதன் பயனாக இருவருமான சேர்த்தியிலே கைங்கர்யங்களைக் கொடுத்து அவனது தொண்டனாக இருக்கச்செய்ய வேண்டுகிறார்.



(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

11-ஆம் அத்தியாயம்

## விசுவரூபதரிசன யோகம்

உமைப்ரியன்

பகவான் கூறியது

மயா ப்ரஸன்னேன தவார்ஜு னேதம்
ரூபம் பரம் தர்சிதமாத்மயோகாத் ।
தேஜோமயம் விச்வமனந்தமாத்யம்
யன்மே த்வதன்யேன ந த்ருஷ்ட
பூர்வம் ।। 47

"அர்ச்சுனா, என்னுடைய பேரருளாலும், என்னுடைய தெய்வீகம் பொருந்திய யோக வலிமையாலும் இந்த ஒளிமிக்க பேருருவம் (விஸ்வரூபம்) உனக்கு என்னால் காட்டப்பட்டது. நீயும் அதனைத் தரிசித்தாய். உன்னைத்தவிர இந்த விஸ்வரூபத்தை யாரும் இதுவரை பார்த்ததில்லை."

[இமயமலை உச்சியில் உள்ள மிக உயர்ந்த சிகரமான எவரெஸ்டினை டென்சிங், ஹில்லாரி ஆகியோர் முதன்முதலாக எட்டிப்பிடித்த மனிதர்கள் என்றால், அதை அடைவதற்காக அவர்கள் மேற்கொண்ட பயிற்சி, உழைப்பு, ஆர்வம் தெரியவரும். இத்தனைப் பண்புகள் தனனகத்தே கொண்டால் தான் மற்றவர்களும் இச்சிகரத்தினை அடையமுடியும் என்ற போது அச்சிகரத்தின் பெருமை, சிறப்பு தெரியவரும். மனிதர்களின் இந்த வெற்றி இயற்கையின் மற்றைய அரிய உண்மைகளை அறிய அதுவழிவகுக்கும். அதேபோன்றுதான் விஸ்வரூபத்தினைக்கண்ட அர்ச்சுனனுக்கு அப்பகவானின் மேலும் பல அறிய ஆற்றல்களை அறிவதற்கான ஓர் உந்துதலை அவரிடம் விளைவிக்கும். இவ் அரிய விஸ்வ ரூபத்தினை அர்ச்சுனனைப்போன்ற ஜீவாத்மாக்கள் அவன் சென்ற நெறியில் கண்டு அறியலாம் என்ற செய்தியினை பகவான் இங்கு நமக்கு அறிவுறுத்துகின்றார்.]

ந வேத யக்ஞாத்யயனைர் ந தானைர்
ந ச க்ரியாபிர் ந தபோபிருக்ரை:।
ஏவம் ரூப: சக்ய அஹம் நிருலோகே
த்ருஷ்டும் த்வதன்யேன
குருப்ரவீர ।। (48)

"குருகுலத்தின் சிறந்த வீரனே! உன்னைத்தவிர வேறு எவராலும் வேதங்களை ஓதுவதாலோ, (அதில் குறிப்பிட்ட) யாகங்களை புரிவதாலோ, தானங்களை மேற்கொள்வதாலோ, பூசைகள், அபிஷேகங்களான கர்ம வகைகளைப் புரிவதாலோ நான் இந்த வடிவத்தில் (விஸ்வரூபத்தில்) காணக்கூடியவன் அல்ல"

[வேத அத்யயனம், தவங்கள், தானங்கள் யாவும் மனிதனை மேம்படுத்தும் சமய வழிமுறைகள்தாம். அவற்றினாலேயே ஒருவனால் இறை உண்மையை அறிந்து கொள்ளமுடியாது. தன்னையே இறைவனிடம் சரணாகதி செய்யுமிடத்து, அவ் இறைவனால் கிடைக்கப்



பெறும் அருள் ஒன்றினா லேயே அவனை அறியமுடியும்; அடைய முடியும்.]

மா தே வ்யதா மா ச வீமூட பாவோ
த்ருஷ்ட்வா ரூபம் கோரமீத்ருங்
மமேதம் ।
வ்யபேதபீ: ப்ரீதமனா: புனஸ்த்வம்
ததேவ மே ரூபமிதம்
ப்ரபச்ய ।। (49)

"இத்தகைய அச்சத்தைத் தரும என் வடிவத்தைக் கண்டு மனக் கலக்கமும், மயங்கிய மனமும் கொள்ள வேண்டாம். பயத்தை விடுத்து, மகிழ்ந்த மனதுடன் மீண்டும் என்னுடைய பழைய வடிவத்தைக் காண்பாயாக!"

சஞ்சயன் கூறியது:

இத்யர்ஜுனம் வாஸுதேவஸ்த
தோக்த்வா
ஸ்வகம் ரூபம் தர்சயாமாஸ பூய: ।
ஆச்வாஸயாமாஸ ச பீதமேனம்
பூத்வா புன: ஸௌம்ய வபுர்
மஹாத்மா ।। (50)

"வாசுதேவனாகிய கண்ணபெருமான் அர்ச்சுனனுக்கு இவ்வாறு கூறியபின்பு, தமக்குரிய பழைய உருவத்தை உள்ளவாறு மீண்டும் காட்டினார். மகாத்மாவான கண்ணன் தனது அமைதியான இனிய வடிவத்துடன் விளங்கி அச்சத்துடன் விளங்கிய அவனை (அர்ச்சுனனை) தேற்றினார்."

[கண்ணனின் விஸ்வரூபம் எவ்வளவுக்கெவ்வளவு அச்சமூட்டியதோ அதற்கு நேர்மாறாக கண்ணனின் குழந்தை வடிவம், சிறுவன் தோற்றம் ஆகியன பார்ப்பவர் மனதில் அமைதியினையும், ஆனந்தத்தையும் விளைவித்தன. இரு வெவ்வேறான உணர்வுகளை உண்டாக்கும் ஆற்றலினால்தான் கண்ணன் மகாத்மாவாக வணங்கப் படுகிறான்.]

அர்ச்சுனன் கூறியது:

த்ருஷ்ட் வேதம் மானுஷம் ரூபம் தவ
ஸௌம்யம் ஜநார்தன: ।
இதானீமஸ்மி ஸம்வ்ருத்த: ஸசேதா:
ப்ரக்ருதிம் கத: ।। (51)

"ஜனார்த்தனா! (உன்னு)டைய இந்த அமைதி(யு)டனுள்ள இனிய உருவைக் கண்டு இப்போது நான் தெளிந்து பழைய மனதுடன் விளங்குகிறேன்"

## தீப ஒளி விளக்கிடுமே!

திரு. வெ. சுந்தரம் ஐயர் - பரமக்குடி.

ஒய்யாரமாகப் பெண்கள் ஒளிவிளக்கு ஏற்றிடவே
மையிருளும் போனதுவே மனையிலொளி தோற்றிடவே
மெய்யான இறையுணர்வு மேதினியில் இணைந்ததுவே
ஐயமின்றி அவனியிலே ஆனந்தம் நிறைந்ததுவே!

புத்தாடை அணிந்தினிது புனிதனவன் தாள்பணிந்து
சித்தமதில் நிறைவான சிறந்தோரைத் தான்வணங்கி
தத்தமது உறவோடும் திறன்கூட்டும் நட்போடும்
தித்திக்கும் இனிப்போடும் திகழ்கின்ற திருநாளே!

இல்லாரும் எளியோரும் இன்பங்கள் ஏற்றிடவே
வல்லாரும் உதவிடுவார் வழிகாட்டி நின்றிடுவார்
நல்லோரின்நா நவல்வதுமே நலமாக்கும் மருந்தாகும்
நல்லருளே நாநிலத்தில் நாள்தோறும் சிறப்பதாகும்!

தீபங்கள் வரிசையிலே திகழுகின்ற சுடரொளியே
பாபங்கள் போக்குகின்ற பக்திமிகும் பண்பொளியே!
கோபவிருள் தனைநீக்கி குணஒளியே தோற்றுவிக்கும்
தீபங்கள் சாட்சிகளாய் தீமையைச் சுட்டெரிக்கும்!

நீரோட நிலங்குளிர நிலத்துள்ளே விதையாவும்
வேரோடி விளையுமாமே விண்முட்டும் தாவரமாய்
சீரோடி கலைநல்கும் சிறப்புமிகு தீபஒளி
பாரெங்கும் பரிதியைப்போல் பவனிவரும் நலம்பலவே!

கட்டியநல் புத்தாடைகள் களிப்போடு பாலர்கள்
எட்டிநின்று வெடிவெடித்து கொட்டுமவர் கைமலர்கள்
கட்டிப்பிடித்து நண்பரொடு களித்தின்பம் தாமுறவே
விட்டகலாப் பேரின்பம் விளைவிக்கும் தீபாவளியே!

உற்றவரும் மற்றவரும் உவந்தின்பம் கொள்ளப்பெறும்
பற்றுடனே பாசமதை பகிர்ந்திட்டு இன்பமுறும்
தோற்றமின்றி துன்பந்தந்த நரகாசுரனும் மறைந்ததாலே
நாற்புறமும் நல்லொளியே நமையாளும் இறையொளியே!

மனவிருளும் மறைந்ததாலே மதியொளியே தேக்கிடுமே
மனங்கொண்ட நல்வாழ்வு மகிமைகள் சேர்ந்திடுமே
பணியாவும் பரிமளிக்கும் பலனெங்கும் நிறைத்திடுமே
அணிகலனாய் பக்திநெறி தீபஒளி விளக்கிடுமே!

[எல்லா உயிரிடத்தும் இறைவன் இருந்தாலும், பூனையை எடுத்து மடியில் கொஞ்சிடும் மனிதன், ஒரு புலியின் அருகே செல்லவே பயப்படுகிறான். இரு பிராணிகளின் உருவ வெளிப்பாடுகள் ஒத்திருந்தாலும், அவற்றின் குணங்கள் மாறுபடுவதால் இவ் அச்சம் உண்டாகிறது. ஆம் அமைதி, பணிவு, அன்பு போன்ற குணங்களே ஒருவனின் பெருமையைப் பேசும்; கோபம், வஞ்சம் போன்றன ஒருவனை தனிமைப்படுத்தும். ஆகவே அருளும், அன்பும், அழகும் கொண்ட பகவானது உருவமே மனிதனை தொழவைக்கின்றது.]

பகவான் கூறியது:

**ஸுதுர்தர்தமிதம் ரூபம் த்ருஷ்ட**
**வானஸி யன்மம ।**
**தேவா அப்யஸ்ய ரூபஸ்ய நித்யம்**
**தர்சன காங்க்ஷிண: ।। (52)**

"தரிசிப்பதற்கு அரியதான எனது இந்த உருவத்தை இப்போது நீ தரிசித்துள்ளாய். இந்த என் உருவத்தைத் தரிசிக்கவே தேவர்களும் என்றும் விரும்புகிறார்கள்."

[தேவர்களும் விரும்புகிறார்கள் என்பதால், அவர்கள் இன்னும் இறைவனின் விஸ்வரூபத்தினை முழுவதுமாக காணவில்லை என்று பொருள்படுகிறது. அத்தகு அரிய காட்சியினை அர்ச்சுனன் பெற்றதால், அவன் இறைவனை பெரிதும் அறிந்தவனாகத் தெரிகிறது.]

**நாஹம் வேதைர்ந தபஸா ந**
**தானேன ந சேஜ்யயா ।**
**சக்ய ஏவம் விதோ த்ரஷ்டும்**
**த்ருஷ்ட வானஸி மாம் யதா**
**।। (53)**

"நீ என்னை எவ்வாறு கண்டாயோ, அவ்வாறு நான் வேதங்களாலோ, தவத்தாலோ, தானத்தாலோ, யாகத்தாலோ காணமுடியாதவன்"

[வெறும் சமயச்சடங்குகளாலோ, பூசைகளாலோ இறைவனை காணமுடியாது, அவனருளை பெறமுடியாது. தீவிரமான 'பக்தி' எனும் உணர்வால் மட்டுமே அவனருளை யார் வேண்டுமென்றாலும் பெறமுடியும் என்பது இச்செய்யுளில் வலியுறுத்தப்படுகின்றது. ]

பக்த்யா த்வனன்யயா சக்ய:
அஹமேவம் விதோ அர்ஜுன ।
ஞாதும் த்ரஷ்டும் ச தத்வேன
ப்ரவேஷ்டும் ச பரந்தப ।। (54)

" பகைவர்களை. கலங்கவைக்கவல்ல அர்ச்சுனா! மாறாத பக்தியினால் மட்டுமே இவ்வாறு என்னை உள்ளவாறு உணரவும், பார்க்கவும், என்னுடன் சேரவும் கூடும்."

[இந்த சுலோகத்தில் 'அனன்யம்' என்னும் சொல் வருகிறது. இதற்கு 'அன்னியமற்றது' என்று பொருள். அதாவது 'பக்தி' அற்ற மற்றது இல்லை என்ற உணர்வாகும். இறைவனே எல்லாம் எங்கும் என்ற உணர்வுடன் அவ் இறைவனை வணங்கிடும் பக்தி உணர்வே இறைவனைக் காண வழிவகுக்கும் சாதனமாகும்.]

மத்கர்மக்ருன் மத்பரமோ மத்பக்த:
ஸங்கவர்ஜித: ।
நிர்வைர: ஸர்வபூதேஷு ய:
ஸ மாமேதி பாண்டவ ।। (55)

"பாண்டவா! எனக்காக வினைகளை மேற்கொள்பவன், என்னையே (அடையவேண்டுமென்ற) குறிக்கோளுடன் இருப்பவன், என்னிடத்து பூரண பக்தி கொண்டவன், பற்றற்றுத் திகழ்பவன், எல்லா உயிர்களிடத்தும் அன்பாக இருப்பவன் ஆகிய எவனோ அவனே என்னை அடைகின்றான்."

[இந்த மண்ணில் மனிதன் தான் வாழ கர்மா எனும் வினைகளை தொடர்ந்து தன் மூச்சிருக்கும் வரை மேற்கொண்டு வருகின்றான். இந்த வினைகள் தன்னல நோக்கத்துடன் விளங்குவன. ஆனால் இறைவனை அடைதற்காக வினைகளை மேற்கொள்பவன் உயர்ந்தவனாகக் கருதப்படுகிறான். உலகாயுத ஆசைகளை அடைவது என்பது உன்னதமான குறிக்கோளாகாது. அந்த இறை உண்மையை அறிவதே சிறந்த குறிக்கோளாகும். இறை பக்தியே புனிதமான ஆத்மாவை உருவாக்குகிறது. அவ் இறைவன் மீது கொள்ளும் பக்தியே, நாட்டமே, மனிதனின் மற்றைய பொருள்கள் மீது கொண்டிருக்கும் ஆசையை அகற்றுகின்றது. அதுவே அவனுள் பற்றற்ற மனப்பான்மையை உண்டாக்குகிறது. எல்லா உயிர்களும் அவ் இறைவனின் கருணையின் பிரதிபலிப்பேயாகும். ஈ முதல யானை வரை எல்லா உயிர்களின் பரமாத்மாவாக இறைவன் இலங்குகிறான். இந்த உயிர்களிடத்து வேற்றுமை பாராட்டுபவன் அவ் இறைவனை. காணவே முடியாது. இறை உண்மையை அறிந்துகொள்ளவே இயலாது. ஆகவே உண்மையான பக்தி, நாட்டம், முயற்சி, அன்பு, தியாகம் ஆகியவையே இறைவனை மனிதன் அறிய வழிவகுக்கும்.]

பதினோராம் அத்தியாம் முற்றும்.

(தொடரும்)



# திருவேங்கடமுடையானும் நம்மாழ்வாரும்

திரு. ஸ்ரீ கிருஷ்ணசுவாமி ஐயங்கார் - திருச்சி.

ஸ்ரீவைஷ்ணவ ஸம்பரதாயத்தில் ப்ரமாணம், ப்ரமேயம், ப்ரமாதா என்னும் மூன்றிலும் தலைசிறந்தவையாக திவ்யப்பிரபந்தங்களும், திவ்ய தேசங்களும், திவ்யஸூரிகளான ஆழ்வார்களும் கொண்டாடப்படுகின்றனர். வேதம், ஸ்ம்ருதிகள், இதிஹாஸ புராணங்கள் ஆகிய ப்ரமாணங்களைக் காட்டிலும் சேதனருக்கு உய்யும் வழியை மிகத் தெளிவாகக் காட்டுகையாலே ஆழ்வார்களின் அருளிச்செயல்கள் திவ்ய ப்ரபந்தங்கள் என்று பெயர் பெற்றன. ப்ரமாணங்களால் அறியப்படும் ஸ்ரீமந் நாராயணனுடைய பரம், வ்யூஹம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை என்னும் ஐந்துநிலைகளிலும் "பின்னானார் வணங்கும் சோதி" (திருநெடு 10) என்கிறபடியே எல்லாக் காலத்திலிருப்பவர்களுக்கும் தஞ்சமான அர்ச்சாஸ்தலங்களே ப்ரமாணங்களால் அறியத்தக்க ப்ரமேயங்களில் தலைசிறந்தவையாகையாலே, அவை திவ்ய தேசங்கள் எனப்படுகின்றன. எம்பெருமானை அறிந்து பரம் பொருளாக அறுதியிட்ட ப்ரமாதாக்களுக்குள், ச்ருதி முதலான ப்ரமாணங்களைக் கண்ட ரிஷிகளைக் காட்டிலும், தமிழ் வேதங்களைக் கண்ட ஆழ்வார்களே தலைசிறந்தவர்களாகையாலே, அவர்கள் திவ்ய ஸூரிகள் என்றும், நித்ய ஸூரிகளின் அம்சாவதாரமாய் இருப்பவர்கள் என்றும் கொண்டாடப்படுகின்றனர்.





தலைசிறந்த ப்ரமாதாக்களான ஆழ்வார்கள் பதின்மரில் வேதம் தமிழ்செய்த மாறனாகிற நம்மாழ்வார் ஆழ்வார்களுக்கெல்லாம் அவயவியாகவும் தலைவராகவும் புகழப்படுகிறார். அர்ச்சாவதாரங்களில் "கலௌ வேங்கடநாயக:" என்கிறபடியே கலி காலத்தில் கண்கண்ட தெய்வமாய் விளங்குகிறவர் திருவேங்கடமுடையானே. திருவேங்கடமுடையான் இப்பொழுது பலவெளிநாடுகளிலும் எழுந்தருளி ஆட்சி புரிவதும் அருள்பாலிப்பதும் வெளிநாட்டினரும் லக்ஷக்கணக்கில் விஷ்ணு பக்தர்களாக மாறித் திருவேங்கடமுடையானை ஸேவிக்க வருவதும் உலகனைத்தும் அறிந்ததாகும். இக்காரணங்களால் அர்ச்சாஸ்தலங்களுக்குள் தலைமைபெற்றிருப்பது திருவேங்கடமலையேயாகும்.

"திருவேங்கடமாமலை ஒன்றுமேதொழ
நம்வினை ஓயுமே"

(திருவாய்மொழி 3-3-8)

என்று நம்மாழ்வார் அருளியது அநுஸந்திகக்தக்கது.

ஆழ்வார்கள் பதின்மரில் தொண்டரடிப்பொடியாழ்வார் தவிர மற்ற ஒன்பதின்மராலும் மங்களாசாஸனம் செய்யப்பெற்றவர் திருவேங்கடமுடையான். இவரகள் இப்பெருமானை 202 பாட்டுக்களில் மங்களாசாஸனம் செய்திருக்கிறார்கள். இவற்றில் நம்மாழவார் பாடிய பாடல்கள் 52 ஆகும். பதின்மர் பாடிய பெருமாளாகிய திருவரங்கனைக் குறித்து நமமாழ்வார் பாடியது பன்னிரண்டு பாடல்களேயாகும்.

நம்மாழ்வார் திருவேங்கடமுடையானைப் பற்றிப் பாடிய பாடல்களுக்குப் பல சிறப்புகள் உண்டு. அவற்றில் ஸ்ரீவைஷ்ணவர்கள் அனைவருக்கும் தஞ்சமான த்வய மந்திரத்தின் விளக்கத்தைத் திருவேங்கடமுடையான் விஷயமாகவே

செய்தார் என்பது தலையாய சிறப்பாகும்.

த்வய மந்திரம் சரணாகதி மந்திரம் என்று புகழ்பெற்றது. ஸ்ரீவைஷ்ணவர்களால் தினந்தோறும் அநுஸந்திக்கப்படுவது. நம்பெருமாளே எம்பெருமானாருக்கு "த்வயத்தை அர்த்தத்துடன் எப்போதும் அநுஸந்தித்துக் கொண்டு இந்த ஸ்ரீரங்கத்திலேயே இனிது வாழ்வீராக" என்று நியமித்ததாக எம்பெருமானார் அருளிய சரணாகதி கத்யம் உரைக்கின்றது. அத்தகைய த்வய மஹா மந்திரத்தில் இரண்டு பகுதிகள் உண்டு. அதில் முதல் பகுதி "ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடிகளை சரணமாக (உபாயமாக) அடைகிறேன்" என்று கூறுகிறது. இரண்டாவது பகுதி, "பெரிய பிராட்டியாரோடு கூடிய நாராயணனுக்கு அவன் உகந்த கைங்கரியம் செய்யக் கடவேன்" என்று பிரார்த்திக்கிறது. இவ்விரண்டாவது பகுதியின் அர்த்தத்தை,

ஒழிவில் காலமெல்லாம் உடனாய்
மன்னி
வழுவிலா அடிமை செய்ய வேண்டும்
நாம்
தெழிகுரலருவித் திருவேங்கடத்து
எழில்கொள் சோதி எந்தைதந்தை
தந்தைக்கே
(திருவாய்மொழி 3-3-1)

என்று தொடங்கும் திருவாய்மொழியில் விரிவாக விளக்கினார். அப்பதிகத்தில், "நாராயணனே நமக்கே" என்பதை "வேங்கடத்து உறைவார்க்கு நமவென்னல் ஆம் கடமை" என்று மொழிபெயர்த்திருப்பது காணத்தக்கது. த்வயத்தின் முதல் பகுதியில் சொல்லப்படும் சரணாகதியை, திருவாய்மொழி ஆறும் பத்தில் உள்ள "உலகமுண்ட பெருவாயா" என்னும் திருவேங்கடமுடையானைப் பற்றிய பத்தாம் திருவாய்மொழியில்,

"அகலகில்லேன் இறையும் என்று
அலர்மேல்மங்கையுறை மார்பா,
நிகரில் புகழாய்! உலகம்
மூன்றுடையாய்!
என்னை ஆள்வானே,
நிகரில் அமரர் முனிக்கணங்கள்
விரும்பும் திருவேங்கடத்தானே
புகலொன்றில்லா அடியேன் உன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே"

என்னும் பத்தாம் பாட்டில் விளக்கினார் நம்மாழ்வார். "அகல கில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை உறைமார்பா" என்னும் முதல் அடியாலே த்வயத்தின் முதல் பதமான "ஸ்ரீமத்" என்னும் சொல்லையும், "நிகரில் புகழாய்! உலகம் மூன்றுடையாய் என்னை ஆள்வானே! நிகரில் அமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே" என்னும் இரண்டாவது மூன்றாவது அடிகளாலே த்வயத்தின் இரண்டாவது பதமான நாராயண சப்தத்தில் சொல்லப்பட்ட எம்பெருமானுடைய வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல்யம், ஸௌலப்யம் என்னும் நான்கு குணங்களையும் காட்டினார். "திருவடிகளைச் சரணமடைகிறேன்" என்னும் முற்பகுதியின் இறுதிப்பகுதியை "புகலொன்றில்லா அடியேன் உன்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே" என்னும் கடைசி அடியாலே விளக்கினார். "தீர்க்க சரணாகதி" என்று புகழ்பெற்ற திருவாய்மொழியில் சரணாகதி மந்திரமான த்வயத்தின் இரு பகுதிகளையும் இப்படித் திருவேங்கடமுடையான் விஷயமாகவே விளக்கியிருப்பது நம்மாழ்வாருக்கு அப்பெருமானிடமுள்ள ஒப்பற்ற ஈடுபாட்டைக் காட்டுகிறது.

ஆழ்வார்கள் தாமான தன்மை நீங்கப்பெற்றுத் தலைமகள் நிலையை அடைந்து பாடும் பாடல்கள் அவர்களுடைய காதலின் மிகுதியைக் காட்டுமாகையாலே தலைசிறந்தவையாகும். திருவேங்கடமுடையானைப் பற்றி நம்மாழ்வார் அருளிய திருவிருத்தத்திலுள்ள பல பாடல்களும், திருவாய்மொழியில் ஆறும் பத்தில் "மாலுக்கு" என்று தொடங்கும் ஆறாம் திருவாய்மொழியும் நம்மாழ்வார் தலைமகள் நிலையை அடைந்து பாடும் பாடல்களாய் அமைந்திருக்கின்றன. இது திருவேங்கடமுடையானிடம் அவருக்குள்ள ஒப்பற்ற காதலைக் காட்டுகிறது.

"சக்ஷுர்தேவாநாம் உத மர்த்யாநாம்" (யஜுர் கா.4-ப்ர. 6-22) என்னும் வேத வாக்கியத்தை "கண்ணாவான் என்றும் - மண்ணோர் விண்ணோர்க்கு - தண்ணார் வேங்கட - விண்ணோர் வெற்பனே" (திருவாய்மொழி 1-8-3) என்னும் பாடலாலே வேதம் தமிழ்செய்த மாறன் திருவேங்கட முடையான் விஷயமாக மொழிபெயர்த்து அருளிச்செய்திருப்பது அவர், திருவேங்கடமுடையானே 'அருமறைகண்ட முழு முதல்வன்' என்று திருவுள்ளம் பற்றியதைக் காட்டுகிறது. இவற்றிலிருந்து நம்மாழ்வாருக்கு மற்ற எல்லா திவ்ய தேசத்து எம்பெருமான்களைக் காட்டிலும் திருவேங்கடமுடையானிடமே தலைசிறந்த ஈடுபாடு இருந்ததென்று விளங்குகிறது.



# வைணவ வழக்குச்சொற்களும் பொருள்களும்

டாக்டர் மா. வரதராஜன், திருப்பதி.

தீக்கதி - கெட்டவழி; நரகத்துக்குப் போகும் வழி
தீக்கரை - முதுகரைய
தீக்குறள் - பிறர்க்குத் துன்பத்தை உண்டு பண்ணுவதான பொய்ச்சொல்; குறள்-குறும்
தீக்கொள்ளி - நெருப்புக்கொளுத்தி
தீங்கரும்பு - இனிய கரும்பு
தீங்குழை - அழகிய மூங்கில்; கழை என்றுகழி பிடித்து விளையாடுகிற மூங்கில்; வளைக் கையாலே எறிந்து விளையாடுகிற மூங்கில்
தீங்குயில் - மதுரமான ஸ்வபாவத்தை யுடைய குயில்
தீங்குழல் - இனிமையான குழல்
தீட்டிவாட்டான் - எழுத்தாணியைத் தீட்டி வாட்டான் - எழுதமாட்டான்.
தீபகம் காட்டுதல் - ருசிகாட்டுதல்
தீண்ட - நலிய
தீண்டாமை - தொடாதபடி
தீத்து - பூஜிப்பித்து
தீத்தொழில் - கெட்ட செயல்; தீயினுடைய தொழில்
தீது - அறிந்து செய்த பாவம்
தீதறு திங்கள் - அழகியதாய் கண்ணுக்கு குளிர்ச்சி செய்யும் சந்திரன்
தீதில்சீர் - சீருக்குத் தீதாவது - தன்னை அடைவாரின் குணகுணங்களை ஆராய்கை. அது இல்லாமை - குற்றமற்ற குணங்கள், 'தீதில் சீர் திருவேங்கடத்தானே' என்பர் நம்மாழ்வார்.
தீதில் நன்னெறி - தீமையோடு கூடின நெறியல்லாமல் நல்லவழி
தீதிலந்தாதி - பகவத் குணங்களை ஒழிய வேறு கதைகளைச் சொல்லும் என்கிற பொல்லாங்கு இல்லாத திருவாய்மொழி
தீப்புப்பூண்டு - விஷப்பூண்டு
தீப்பப்பூடுகள் - முளைக்கிறபோதே பாம்புகள் போல பிரசித்தமான காஞ்சொறி, எரிபுழு முதலான விஷப்பூண்டுகள்; தீமை செய்வதில் மனம், வாக்கு, சொல் ஆகிய மூன்று காரணங்களை உடையவர்கள்.
தீப்பால பேய்த்தாய் - பொல்லாத தன்மையையுடைய பேய் - பேய்ச்சி, பூதனை - அவளானதாய்
தீம் - இனிமை
தீம்பலங்கனி - இனிய பலாப்பழம்
தீம்பர் - தீமைக்கள்
தீம்பு - விஷம்
தீம்பால் - இனியபால்
தீமழை - அழிவை உண்டாக்கும் மழை
தீமாற்றமும் சாரா - கெட்ட பெயர் அணுகாது
தீமுகத்துநாகம் - வேண்டாதவர்கள் கிட்டி வந்து நில்லாதபடி நெருப்பை உமிழுந்தாற்போலே இருக்கிற திருவனந்தாழ்வான்.
தீமுற்றத்திலங்கை யூட்டினான் - இலங்கை முழுதும் தீயூட்டினான்
தீயகம் - அக்நி
தீயபணம் - விஷத்துக்கு இருப்பிடமாய் தீயதான பணம்
தீயபுந்திக்கஞ்சன் - கெட்ட புத்தியுடைய கம்சன்
தீயர் - அக்நியையுடையவர்; வேள்வி செய்பவர்
தீயரக்கி - கொடிய அரக்கி; சூர்ப்பணகை
தீயவலவலை - கொடிய நினைவையுடைய வளாய், அலவலை - வாய்பாறி ஏதுமவள்.
தீயன - கொடிய தன்மைகள்
தீயிணக்கிணங்காடி - பொல்லாத இணக்கத்தோடே இணங்கி வந்து; தாயக்கடங்காதபடி; உறவறுக்கும் விஷத்தோடே கலந்து என்றபடி. தீயிணக்கு - தகாத விளையாட்டு
தீயினில் தூசாகும் - நெருப்பிலிட்ட பஞ்சுபோலே ஆகும்.
தியுலா வெங்கதிர் - வெவ்விய கதிரையுடைய சூரியன்
தீயெம்பெருமான் - அக்னிக்கு அந்தர்யாமியாய் நிர்வகிக்கும் ஸர்வேச்வரன்.
தீயோம்புகை - அக்னியை வளர்க்கை; ஹோமம் வளர்க்கை

தீர் - தித்திப்பு
தீர்க்கல் - போக்குகை
தீர்க்கிற்றிரே - தீர்க்கவல்லிகோளோ
தீர்த்தகரராமின் திரிந்து - உலகெல்லாம் திரிந்து உங்கள் சம்பந்தத்தாலே நாட்டை தூய்மையாக் குங்கோள்
தீர்த்தம் - விழா; நீர்; தீர்த்தம்; அருக் கன்; அரசன்; சிராத்த தினத்திற்கும் பெயர்
தீர்த்தங்களாயிரம் - தீர்த்தங்களான ஆயிரம் திருவாய்மொழி; தீர்த்தமா வது தன் இனிமையாலே மற்றொன்றில் போகமுடியா தபடி பண்ணவல்லதாகும் பெருமாள்
தீர்த்தத்தன்றே திருமுளைச்சாற்று - பிரம்மோற்சவத்தில் தீர்த்த வாரி அன்றே (ஒன்பதாம் நாள்) கொடியை இறங்கப் பண்ணுதல்
தீர்த்தநீர் - எல்லா பாபங்களையும் போக்கும் சக்தியையுடைய நீர்; எல்லா வளப்பத் தையும் பண்ணிக்கொடுக் கும் நீர்
தீர்த்தபலம் தருநீர் - மங்களாசாசனம் வரையி லான பலத்தைத்தரும் நீர்
தீர்த்தம் ப்ரஸாதிக்கை - தீர்த்தத்துக்குப் பிறகு அடுத்தநாள் திருநாள் முடிவு
தீர்த்த மனத்தையுடையவன் - துணிந்த மனத்தை உடை யவன்
தீர்த்தமுடைத் திருமாலிருஞ்சோலை - தீர்த்த துறைகளை - குளிக் கிற கட்டங்களை - உடைய திருமாலிருஞ்சோலை
தீர்த்தருளாய் - போக்கியருளாய்
தீர்த்தவடிமை - மற்ற உறுதிப்பொருள்களில் ஆசையை அறுக்கவல்ல அடிமை; தீரப் பண்ணின அடிமை.
தீர்த்தன் - போக்கினவன்; தூய வன்; சுத்தியை உடைய வன். மூழ்கும் துறையாம் படி எளிமையானவன்.
தீர்த்தவெம்பெருமான் - சாளக்ராம மூர்த்தி; ஒருவ ரால் செய்ததல்லாமல் கண் டகீ நதி தீர்த்தத்தில் மட் டுமே தோன்றும் மூர்த்தி; எவ்வித அலங்காரமும் உப சாரமும் செய்யமுடியா மல் திருமஞ்சனம் மட் டுமே செய்யும்படி இருக்கும் மூர்த்தி
தீர்த்தவடியவர் - உறுதியோடு உள்ள அடிய வர். அதாவது எம்பெரு மானே உபாயம் உபேயம் என்றிருக்கும் அடியவர்கள்.
தீர்த்தவெந்தோழி - அந்தரங்கையான தோழி
தீர்ந்தேன் - தளர்ந்தேன்
தீர்ந்தொழிந்தேன் - போகப்பெற்றேன்; தீரப் பெற்றேன்
தீர் மருந்து - போக்கும் மருந்து; தீர்க்கும் மருந்து
தீரக்கழிய - மிகவும் அதிகமாக
தீர இரும்புண்டநீர் - காய்ச்சல் தீர இரும்பு உண் டநீர்
தீராத சீற்றம் - தீராக்கோபம்; அடங்காத கோபம்
தீரா நோய் செய்தல் - பக்தியை உண்டாக்குதல்; பக்திதான் எப்போதுள்ள நோய்
தீராமாற்றுக - தீர்க்கமுடியாத செயலாக
தீராவுடம்பு - அழியக்கடவதான உடம்பு; தளர்ந்த உடம்பு
தீராவெகுளியன் - சீற்றத்துக்கு அவதியில்லா தவன்
தீவட்டி சலாம் - கோயிலில் பெரிய பந் தம் பிடித்து சாயங்கா லம் க்ஷீராந்நம் நைவேத னம் செய்யும்போது உப சரிப்பது
தீவாய் - நெருப்பு வாயையுடைய வன்
தீவிகை - விளக்கு
தீவிளவு - கொடிய விளாமரம்
தீவிளி விளிவன்வர்ளா - கொடிய/ தகாத சொற்க ளைச் சொல்லி வியர்த்த மாகப் பேசுகிறவன்; கேட் டார்க்கு நெருப்பை வழிய விட்டாற்போலே குடிபறி போம்படியாக வாய்விடு வது
தீற்றி - உண்பித்து; தின்னுதல்-தன்வினை. தீற்றி-பிற வினை
தீன்தேன் - இனியதேன்; தீம்தேன்-தீம் இனிப்ப

## து

துக்கச்சுழல் - வளையவருகிற துக்கம், கர் பம் வாசம்போலே சுற்றிக் கிடக்கிற துக்கம்
துக்கமிலன் - துக்கத்தையுடையேனல் லேன்
துகள் - தூளி; குற்றம்; புழுதி
துகில் - துணி; விருதுக்கொடி
துகைக்கை - மாய்க்கை; மதிக்கை
துங்கம் - உயர்த்தி; உந்நதமானது
துங்கக்கரி - அடங்காத யானை
துங்கமுகமாளிகை - ஓங்கின முகம், முன் பாகத்தை உடைய மாளிகை

துங்காரரவத்திரை - உயர்த்தியையும் பெரிய ஆரவாரத்தையுமுடைய அலை
துச்சோதனன் - ஒருவரால் சோதிக்க முடியாத நெஞ்சையுடையவன்; துரியோதனன் தம்பி
துஞ்சக்கொடான் - அழியும்படி விட்டுக்கொடான்
துஞ்சா நீர்வளம் - நீர்மாறாதே இருக்கும் வளம்
துஞ்சா முனிவர் - முடிவில்லாத முனிவர்
துஞ்சுதல் - உறங்குதல்; நீண்ட உறக்கமாகிற மரணம்-உபசார வழக்கு
துடக்கு - வாசனை; சம்பந்தம் - குடல் துடக்கு-சரிர சம்பந்தம்
துடர் - விலங்கு; சங்கிலியாகிற ஆபரணம்
துடர்ச்சி - செறிவு; ஸ்வபாபம்; தொடர்ச்சி
துடவை - விளைநிலம்; உழவு மந்தை
துடி - உடுக்கை; ஒருவித வாத்தியம்; பெண்களின் இடுப்புக்கு உவமையாயிருப்பதால் உடுக்கைபோல் இடைகுறுகின வாத்தியம்
துடிப்பு - ஈடுபாடும் வருத்தமும்
துடிபடுங்கவ்வை - பறை அறைதல் போன்ற ஆரவாரம், துடியின் ஓசை போன்ற கவ்வை
துடியடி - யானைக்கன்று
துடை - மாலை; ஸந்தர்ப்பம்; ஒரு உறுப்பு
துடைக்கிளவி - அழகிய ஸந்தர்பத்தை உடைய சொல்
துடைக்கீழே கிடக்கை - வசமாயிருக்கை
துடை குத்துகை - உறங்கும்படி துடை தட்டுகை; தாலாட்டுகை
துடைகுத்தலிட்டு - தாலாட்டுப் பாடுகை
துடைகொள்ள - அறிய
துடைப்பற்று - துடையே துடைப்பற்று. துடையாகிற இடம். துடையிடம். சதைப் பற்றுபோல துடைப்பற்று
துண்டம் - மூறி, முகம்
துண்ணென - சீக்கிரமாக
துணர் - பூங்கொத்து; பூந்தாது
துணரி - பூங்கொத்து
துணங்கை யெறிந்து - கூட்டமாக இருந்து கைதட்டி;
துணிகை - பயிலுகை
துணிதல் - தெளிதல்
துணுக்கம் - பயம்
துணி செய்தான் - வெட்டினான்
துணிந்ததுணிவு - கொண்ட உறுதி
துணிபட - வெட்டுபட்டபடி; துண்டாம்படி
துணிபலவா - பல துண்டாக; பலகூறாக
துணிமுன்பு நால - ஆடைபின்னுக்கு எட்டாமையாலே முன்னளவிலே தொங்கும்படி
துணுக்கென்று - சீக்கிரமாக
துணுக்குத் துணுக்கு - பயத்தினாலே திடுக்குத் திடுக்கு
துணைக்கை - ஒன்று கூடினகை, அஞ்சலி பண்ணின கை
துணைநிலை - துணையான இடம்; புகலிடம்
துணைநூல் மாப்பிளந்தணர் - இரண்டு பூணூல் தரித்த பிராம்மணர்
துணைவன் - தலைவன்; தோழன்; காப்பாளன்
துத்தி - திருவடிநிலை. திருமண் காப்பு; பாம்பின் படப்பொறி
துதங்கள் - தோத்திரங்கள்; துதிகள்
துதைத்தல் - மிதித்தல்; நெருக்குதல்
துப்பம் - உறைந்த நெய்; காய்ந்த பால்; திரட்டுப்பால்
துப்பரவு - மிடுக்கு; சாமர்த்தியம்; சக்தி. வீடு துப்பரவாயிருக்கிறது - சுத்தமாய் இருக்கிறது என்றபடி
துப்பன் - காக்கும் சக்தியையுடையவன்
துப்பு - பவளமணி; துணை; அநுபவம் அறிவு; அழகு; படைக்கலம்; சாமர்த்யம்
தும்பிமணி - உயர்ந்த வண்டு
தும்புரு - பாடவல்ல ருஷி
துமிலம் - பெரிய ஆரவாரம்
துமிதம் - திவலை
துயக்கு - மனத்திரிவு; சந்தேகம்; மயக்கம்
துயர்கூர - துக்கம்மிக
துயர்ப்பிறவி - துயரைவிளைவிக்கும் பிறவி
துயரமில்சீர் - குற்றங்களுக்கு எதிர்த்தட்டான கல்யாண குணங்கள்
துயரறு சுடரடி - அடியார்களின் துக்கங்களைப் போக்குவதான திருவடி
துயராட்டியேன் - வருத்தத்தையுடைய நான்
துயருழந்தார் - துயரத்தை அநுபவித்தார்
துயிலணை - படுக்கைச்சேர்த்தி
துயிலணைகொள்ளேன் - எனக்குப் படுக்கை கொள்ளவில்லை; தூக்கம் வரவில்லை என்றபடி
துயிலெழுப்பாடுதல் - திருப்பள்ளியெழுச்சி பாடுதல்
துர்க்கச்சவரணை - சவரணை-கட்டு, பந்தம் துர்க்கம்-கோட்டை; கோட்

டையாகிற பந்தம்

துரக்கும் - ஓடச்செய்யும்
துரகம், துரங்கம் - குதிரை
துரந்து வருதல் - தொடர்ந்து வருதல்
துரவு தத்துவார் - துரவு-கிணறு, தோட்டம் தத்துவார்-தாண்டுவார்
துராலான - கோதான; அவசரமான; அசாரமான
துரிசன் - கள்ளன்
துருதுருக்கை - பரபரக்கை
துருப்புக்கூடு துறுப்புக்கூடு - தூற்றுப்பொலி, அதாவது இன்னார் இனியார் என்னாதே அவ்வூரில் எல்லாரையும் விரும்புவது பொலி-அம்பாரம்
துருவி நிலைகுத்த- களவுபோன பொருளை அடையாளமறிந்து பிடிக்கை
துலங்கொளி - மிக்க ஒளி
துரும்பெழுந்தாட - விசாரத்தையடைய
துரும்பெழுந்தாடுகை - அசேனமும் (அறிவற்ற பொருளும்) எழுந்தாடும்படியான அழகு
துருவுகை - தேடுகை
துருவை - பார்வதி; ஆடு
துலக்கு - மினுக்கு; வெளிப்படுத்துகை
துலாம் - துலாக்கோல் குறுக்காயிருக்கும்; தூண் மேல் உள்ள உத்தரத்திற்குத் துலாம் என்று பெயர்
துலுக்குதல் - அசைத்தல்
துலை - ஒப்பு; எதிர்நிறுக்கை
துலைகொண்டு - சரியாகக்கொண்டு; உருவமிட்டுக் கொண்டு
துலைய - முழுமையாக
துலைவியேல் - தொலைவு-மாண்பு; போக்காதேகொள்
துலைவு தொலைவு - அழிவு
துவக்க - சேர்ப்பிக்க
துவக்கு - சம்பந்தம்; தோல்; வசீகரிக்கை
துவக்குண்கிற - ஈடுபட்டு அநுபவிக்கிற
துவக்கும் - தடுக்கும்
துவண்டுபோதல் - உலர்ந்து போதல்
துவர் - சிவப்பு; பவளம்
துவர்தல் - ஆடுதல்; உவர்தல்
துவர்ந்து - பசையற உலர்ந்து
துவராடை - சிவப்பு ஆடை
துவராபதி - துவாரகைக்கு அதிபதி-கண்ணன்
துவரி - இலவம்; காவி நிறம்; இலவமரத்தின் சிவந்தபூ
துவரித்தவுடையவர் - சிவந்த துணியுடுக்கும் பௌத்தர்
துவரிதழ் - யானை
துவருடுக்கை - துவரூட்டின உடைத்தோல்
துவரை - துவாரகை. கண்ணன் பிறந்த ஊர்
துவள் - குற்றம்
துவளுதல் - சுவறிப்போதல்; வற்றிப் போதல்; ஈடுபடுதல்
துவாபரம் - துவாபரயுகம்
துழதி - பாரம்; துக்கம்
துழாவுதல் - தடவுதல்; ஆராய்தல்; தடுமாறுதல்
துழாய்க்கண்ணி - துளசிமாலை
துழாவி - புகுந்து அநுபவித்து
துள்ளம்சோர - துளிசோர்ந்து
துளக்கம் - நடுக்கம்
துளங்குதல் - மின்னுதல்; விளங்குதல்; பயப்படுதல்
துளபத்தொண்டு - துளசி தோட்டம் வைத்து அடிமை செய்கையாகிற தொண்டு
துளம் - மாதுளம்; பீலிக்காம்பு
துளவு - துளசி
துளும்ப - நிரம்ப; அலையும்படி
துற்றுதல் - அநுபவிக்கப்பெறுதல்
துற்றாக - ஒரு பிடியாக
துற்றுற்று - பிடிக்கப்போராத
துற்றிவிடும் - சாப்பிட்டு விடும்
துற்றிய தெற்றெனவு - எல்லாவற்றையுமுண்ட வெட்கக்கேடு
துற்று - பிடிசோறு
துறுகின்றிலர் - சூட்டுகின்றிலர்
துறைச்சுவடி - தீர்த்தமகாத்மியம்; ஸ்நாநகட்ட புராணம்
துறையில்லை - வழியில்லை
துறோட்டி - அங்குசம்; மரத்தில் காய் பறிக்கும் துறட்டி
துன்னம் - துளை
துன்னு - முதுகு; புறம்
துன்னுகை - நெருங்குகை
துன்னி - முழுமையாகப் பரந்து
துன்னிய சாலேகம் - விரல்நுழையாதபடி காற்றுக்குச் சீரையிட்டு வழியிட்டுப் புகுரவேண்டும்படி நெருங்கியுள்ள ஜன்னல்
துனி - கருமம்



Published on behalf of T.T.Devasthanams by N.S.Ramamurthy, M.A., Editor and
Printed at T.T.D.Press by M. Lakshmana Rao, B.A., L.P.T., T.T.D.Press, Tirupati - 517 507.

